# மலையூர் அறிவோம்





வாழியூர். வே. இராசவேலன்

# மலையூர் அறிவோம்

## கட்டுரைகள்

ஆசிரியர் :

தமிழர் திலகம், செந்தமிழ்ச் சிகரம்

**வாழியூர் வே. இராசவேலன்,** க.மு; கல்.மு

செயலாளர், கம்பன் கழகம், வாழியூர்.



பேரரசு பதிப்பகம்

201, பிள்ளையார் கோயில் தெரு, வாழியூர்

ஒண்ணுபுரம் வழி – 632 315. திருவண்ணாமலை மாவட்டம்.

தொ.பே. : 04173 – 243724, 293976

## நூல் விவரத் தொகுப்பு

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | மலையூர் அறிவோம் |
| பொருள் | : | கட்டுரைகள் |
| ஆசிரியர் பெயர் | : | வாழியூர் வே. இராசவேலன் |
| உரிமை | : | கம்பன் கழகம், வாழியூர் |
| பதிப்பு | : | டிசம்பர் 2008 |
| மொழி | : | தமிழ் |
| தாள் | : | 10.5 கி.கி. வெள்ளைத்தாள் |
| பக்கங்கள் | : | 176 |
| எழுத்து | : | 12 புள்ளி |
| அச்சகம் | : | கவிக்குயில் பிரிண்டர்ஸ்,<br>47, நல்லதம்பி தெரு,<br>சென்னை – 5. |
| அட்டை ஓவியம் | : | ஜமால், சென்னை–5. |
| விலை | : | ரூ. 60.00 |
| வெளியீடு | : | பேரரசு பதிப்பகம்<br>201, பிள்ளையார் கோயில் தெரு,<br>வாழியூர் – 632 315. |



நூலாசிரியர் பெற்றோர்

**இரா. வேங்கடாசலம், வீரகங்காள்**

## உயிர்ச்சுடர் வழிகாட்டி வரட்டும்

என்னை ஈன்(று) இப்பார்க்
கடலில் தவிக்க விட்டுச்
சென்றுவிட்டீர்! துன்பமெனும்
பேரலைகள் - என்னையிங்கே
துன்புறுத்துங் கால்நும்
உயிர்ச்சுடர் நின்றெனக்கு
நன்னெறி காட்டி வரட்டும்.

நினைவுடன்
**வாழியூர் வே. இராசவேலன்**

# ஆசிரியர் பற்றி

| | | |
|---|---|---|
| பெயர் | : | வே. இராசவேலன் |
| பிறப்பு | : | 25.10.1941 |
| ஊர் | : | வாழியூர், திருவண்ணாமலை மாவட்டம். |
| பெற்றோர் | : | இரா. வேங்கடாசலம் – வீரகங்காள் |
| படிப்பு | : | பி.ஏ.,(வரலாறு) எம்.ஏ. (தமிழ்), எம்.எட்., |
| பணி | : | தமிழ் ஆசிரியர் (ஓய்வு),<br>அரிசி ஆலை, உழவு |
| பொறுப்பு | : | செயலாளர் :<br>கம்பன் கழகம், திருவள்ளுவர் கழகம்,<br>இளங்கோ மன்றம், வாழியூர்<br>இணைச் செயலாளர் :<br>வேலூர் மலைக் கோட்டைக் கவியரங்கம்.<br>செயற்குழு உறுப்பினர்:<br>உலக எழுத்தாளர் சங்கம், வேலூர் கிளை. |
| படைப்புகள் | : | 35 நூல்கள் |

விருதுகளும்
பாராட்டுகளும் : 1987–ல் சென்னை கம்பன் கழகம், கோவை தொழிலதிபர் திரு. ஜி.கே. சுந்தரம் அவர்களின் கொடைக் கரங்களால் ஆயிரம் வெண்பொற்காசுகளை வழங்கிச் சிறப்பித்தது. 1991ல் காஞ்சிபுரம் கவிதைச்சோலை கவிஞர் மன்னர் மன்னன் அவர்களின் கவிக் கரங்களால் பாவேந்தர் பட்டயம் வழங்கி சிறப்பித்தது. 1993ல் வேலூர் இலக்கிய அன்பர்கள் வட்டம் முனைவர் மா.நன்னன் அவர்களின் திருக்கரங்களால் **தமிழர் திலகம்** விருதினை வழங்கிச் சிறப்பித்தது. 1997–ல் அனைத்திந்திய தமிழ் எழுத்தாளர் சங்கம் வேலூர் கிளை திரு. பாலசுப்பிரமணியம் அவர்களின் கொடைக் கரங்களால் **புலமைப் பூங்கா** விருது வழங்கிச் சிறப்பித்தது. 1997ல் வேலூர் கம்பன் கழகம் திரு. வி. இராமமூர்த்தி அவர்களின் அன்புக்கரங்களால் **கம்பர்சீர்பரவுவார்** விருது வழங்கிச் சிறப்பித்தது. 2005–ல் மதுராந்தகம் வட்டம், மேலக்காண்டை பாரதி நற்பணி மன்றம் கவிமாமணி ஏர்வாடி இராதாகிருஷ்ணன் அவர்களின் கவிக்கரங்களால் **செந்தமிழ்ச் சிகரம்** விருது வழங்கிச் சிறப்பித்தது.

| | | |
|---|---|---|
| பிற சிறப்புகள் | : | கவிஞர், எழுத்தாளர், பட்டிமண்டபப் பேச்சாளர், இலக்கியச் சொற்பொழிவாளர். |
| மனைவி | : | சரசுவதி ராசவேலன் – அரசு பதிவு பெற்ற ஓமியோபதி மருத்துவர். |
| மக்கள் | : | திருச்செல்வி ஆறுமுகம்;<br>சோதிலட்சுமி கருணாநிதி;<br>மின்னொளி சீனிவாசன்;<br>நிர்மலா சரவணன்;<br>கயல்விழி பழனிவேல்,<br>இராச. பேரரசு. |
| விருப்பம் | : | பிறமொழி கலவாமல் தமிழர் தமிழில் கையெழுத்திடவும், பேசவும், எழுதவும் அழைப்பிதழ் அச்சிடவும் வேண்டும். இனம், சமய வேறுபாடுகளை விடுத்து அனைவரும் இந்தியர் என்ற ஒருமைப்பாட்டு உணர்வோடு வாழ வேண்டும். நாட்டில் உள்ள கட்சிகள் எல்லாம் ஒன்றுபட்டு இரு கட்சிகள் மட்டும் இயங்க வேண்டும். |



# அணிந்துரை

**கவிஞர் விவேகா,**
திரைப்படப் பாடலாசிரியர்,
சென்னை – 37.

சென்னை –17
12.11.2008

உவமைக் கவிஞர் சுரதா யாரைப் பார்த்தாலும் முதலில் எந்த ஊர் என்று கேட்பது வழக்கம். ஊரில் என்ன இருக்கிறது ஏன் இப்படி கேட்கிறார் என்று நான் பலமுறை குழம்பிப் போனதுண்டு.

ஊரின் பெயரில் எல்லாம் இருக்கிறது என்பதை வாழியூர் வே. இராசவேலன் அவர்களின் இந்நூலைப் படிக்கும்போது உணர்கிறேன்.

சிறுவயதில் திரைப்படம் பார்க்கவும் கருடசேவை விழா பார்ப்பதற்குமாக நான் சுற்றித் திரிந்த செங்கம் நகரின் பெயர்க் காரணத்தை அறிந்தபோது மிகுந்த மனக்கிளர்ச்சியுற்றேன். செங்கண்மால் நகர் என்பதே செங்கம் ஆகியிருப்பதும், மலைபடுகடாமில் இவ் வூரைப் பற்றியக் குறிப்பு காணக் கிடைப்பதும் எனக்குப் புதிய செய்தி.

சொரகுளத்தூர் என்று விவசாயிகள் பேச்சில் சாதாரணமாகப் புழங்கும் ஊர், தேவர்கள் (சுரர்) இவ்வூர்க் குளத்தில் நீராடியதால் ஏற்பட்டதாகக் கூறுவது சிறப்பு.

போக்குவரத்து மற்றும் தொலைத்தொடர்பு வசதிகள் இல்லாத காலத்தில் மக்களால் உருவாக்கப்பட்ட பெயர்கள், இணையத்தில் தட்டினால் அமெரிக்காவின் ஃபுளோரிடா மாநில நண்பனோடு முகம் பார்த்தே பேச முடியும். அதிநவீனமான இக் காலத்திலும் பிரமிப்பூட்டுவதாக இருக்கிறது. ஊர்ப் பெயர்களில் உள்ள வார்த்தைகள் எக்காலத்தியத் தமிழ் என்பதையும் அதன் மூலம் அவ்வூரின் பழமை மற்றும் பாரம்பரியத்தையும் அறிய முடிவது எவ்வளவு பெரிய அற்புதம்!

தென்பெண்ணை நதிக்கரையில் உள்ள 'நீப்பத்துறை' என்ற ஊரின் பெயர் 'நீர்ப் பெருகும் துறை' என்பதன் திரிபு என்ற கூற்று மிகப் பொருத்தமானது. பெண்ணை ஆற்றங்கரையின் வேறொரு பகுதியில் அமைந்திருக்கும் வேடங்குளம் எனும் குக்கிராமத்தில் பிறந்தவன் என்பதால்,

**'வெண்ணை உருகுமுன்**
**பெண்ணை பெருகும்'**

என்று காலம் காலமாய்க் கூறப்பட்டு வரும் செய்தியை அறிந்திருக்கிறேன்.

ஒவ்வொரு ஊரைப் பற்றியும் நன்கறிந்தவர்கள் மூலமாக செய்திகளைச் சேகரித்து அவர்களின் பெயர்களோடு அச்சேற்றியிருப்பது வாழியூர் வே. இராசவேலன் அவர்களின் பெருந்தன்மையையும், இச்சமூகத்தின் மீது அவர் கொண்டிருக்கும் அக்கறையையும் செய்திகளின் உண்மைத்தன்மையை யும் காட்டுகிறது.

ஒரு முறை இயக்குனர் இமயம் பாரதிராஜா அவர்களோடு பேசிக்கொண்டிருந்தபோது "உயரங்களின் வேர்" கவிதைத் தொகுப்பைப் படித்து விட்டு நீங்கள் தேனி மாவட்டத்துக்காரர் என நினைத்தேன் என்றார். எழுத்தில் அசலான தமிழகக் கிராமத்தைக் காண முடிகிறது என்றார்.

தமிழக ஊர்களுக்கென்று பொதுக்குணங் களிருந்தாலும் ஒவ்வொன்றும் தனியாக ஒரு வரலாற்றைத் தன்னகத்தே வைத்திருக்கிறது. அந்த வரலாற்றின் சுருக்கமாக அதன் பெயர் இருக்கிறது.

பொருளீட்டுவதன் பொருட்டு மனிதர்கள் எங்கெங்கோ பெயர்ந்து வாழ்ந்து கொண்டிருந்தாலும் தினமும் தாம் பிறந்த ஊரின் ஏதோ ஒரு அம்சம் நினைவில் வாராமலிருக்காது. ஊர்ப்பாசம் தாயின் மீதான பாசத்தை போல் புனிதமானதுதான்.

திரிகோண மலைக்காற்றையும் வவுனியா பனைமரக் காடுகளையும் துறந்து பிரித்தானிய,

அமெரிக்க நகரங்களில் வேரற்றவர்களாய் புழுங்கும் ஈழத்தமிழர்களின் நெடுந்துயர் நாமறிவோம்.

மணமான ஓரிரு வருடங்களில் விமானமேறி குவைத்தின் எண்ணைக் கிணறுகளில் கருகிக் கொண்டு கடிதத்தின் மூலமாகவே மனைவியோடு பாதி வாழ்க்கையைக் கழிக்கும் – புகைப்படத்தில் குழந்தைக்கு முத்தமிட்டு கண்ணீர் விடும் தொழிலாளிக்குத் தெரியும் பிறந்த ஊரின் பெருங்கவர்ச்சி.

ஊரற்றவன் வேரற்றவன்தான்.

தமிழார்வலர்களை வசீகரிக்கும் பல அரிய நூல்களை இயற்றியுள்ள வாழியூர் வே. இராசவேலன் அவர்களின் மணிமகுடத்தில் இன்னொரு மாணிக்கக் கல் இந்நூல்.

எதற்கெல்லாமோ விருதுகளை வீணடித்துக் கொண்டிருக்கும் இலக்கிய அமைப்புகளும் அரசும் இந்நூலைக் கவனத்திற் கொள்ள வேண்டும்.

தம் பெயரில் கூட ஊரைச் சுமந்து கொண்டி ருக்கும் வாழியூர் வே. இராசவேலனாரின் இத்தூயத் தமிழ்த் தொண்டைப் போற்றி வாழ்த்துகிறேன்.



# உள்ளே நுழையும் முன்...

நிறையன்புடையீர் வணக்கம்!

'மலையூர் அறிவோம்' என்ற இந்நூலில் திருவண்ணாமலை மாவட்டத்திலுள்ள ஊர்களின் பெயர்கள். அவ்வூர்களுக்கு அப்பெயர் வந்த காரணம் ஆகியவற்றைத் தொகுத்துள்ளேன். திருவண்ணா மலை மாவட்டத்தில் இரண்டு கோட்டங்கள் உள்ளன.

ஒவ்வொரு கோட்டத்திலும் உள்ள ஊர்களை அகர வரிசைப்படி தொகுத்திருக்கிறேன். செவிவழிச் செய்தி, வரலாற்றுச் செய்தி, புராணச் செய்தி ஆகிய மூன்று வழிகளில் ஏதாவது ஒரு வழியில் உள்ள பெயர்க்காரணம் கொடுக்கப் பட்டுள்ளது.

என்னால் எல்லா இடங்களுக்கும் நேரில் செல்ல முடியவில்லை. ஆகவே நண்பர்கள் மூலம் ஊரின் பெயர்க் காரணத்தைத் தொகுத்துள்ளேன். அவ்வாறு செய்திகள் அளித்த அன்பர்களின் பெயர், ஊர் ஆகியவற்றையும் கொடுத்தி ருக்கிறேன்.

இந்நூலில் நானே சில செய்திகளை அளித்துள் ளேன். வாழியூர் வளவன், சரவேல் என்ற புனைப்பெயர்களிலும் செய்தி கொடுத்திருக்கிறேன். நான் செய்தி சேகரிக்க நூல்கள் கொடுத்து உதவிய கவிஞர் வே. இரா. சிவஞானவள்ளல், புலவர். மு. சுப்பிரமணி, கிராம நிர்வாக அதிகாரி டி.இராசா ஆகியோர்க்கு நன்றி.

நான் நேரில் சென்று விசாரித்தபோது தகவல்கள் தந்த அன்பர்களுக்கும், செய்திகளை அனுப்பி உதவிய சான்றோர்களுக்கும் என்னுடைய நன்றி.

இந்நூலுக்கு அருமையான அணிந்துரை வழங்கிய திரைப்படக்கவிஞர், விவேகா அவர் களுக்கும் நன்றி.

திருவண்ணாமலை மாவட்டத்திலுள்ள ஊர்களின் பட்டியல் (ஒன்றியம் வாரியாக) அளித்த பாலூர் சு. துளசிராமனுக்கு நன்றி.

இந்நூலை சிறப்பாக அச்சிட்டுத் தந்த கவிக்குயில் அச்சகத்தாருக்கும், அட்டைப்படம் வரைந்து தந்த ஓவியர் ஜமால் அவர்களுக்கும் நன்றி.

மெய்ப்பூ (புரூப்) பார்க்கும்போது உதவிய என் துணைவி மருத்துவர் சரசுவதிராசவேலனுக்கு நன்றி. இத்தொகுப்பு வேலையில் ஈடுபடும்போது அழுது

அடம்பிடிக்காமல் அமைதியாக இருந்த என் பெயர்த்தி சரவண. நிலவழகிக்கு வாழ்த்துகள்.

இந்நூலில் குறை ஏதாவது இருப்பின் தெரிவித்தால் அடுத்த பதிப்பில் திருத்தி வெளி யிடுவேன்.

திருவண்ணாமலை மாவட்டத்தில் நிறைய ஊர்கள் விடுபட்டு உள்ளன. அவ்வூர்களைப் பற்றி குறிப்பினை அனுப்பி வைத்தால் அடுத்த பதிப்பில் வெளியிட வசதியாக இருக்கும். நன்றி! வணக்கம்! வாழிய செந்தமிழ்!

இப்பொழுது உள்ளே நுழையலாம்!

என்றும் மாறாத அன்புடன்

**வாழியூர் வே. இராசவேலன்**

# உள்ளே...

## திருவண்ணாமலை கோட்டம்

1. அத்திமூர்
2. அந்தனூர்
3. அலியாபாத்
4. ஆதமங்கலம்
5. ஆனந்தவாடி
6. இனாம் காரியந்தல்
7. எலத்தூர்
8. ஏரிக்குப்பம்
9. கடலாடி
10. கணேசபுரம்
11. கண்ணனூர்
12. கரிமலாபாடி
13. கலசபாக்கம்
14. கல்வாசல்
15. காளசமுத்திரம்
16. குண்ணத்தூர்
17. குயிலுவம்
18. குருவிமலை
19. கேட்டவரம்பாளையம்
20. கோளாப்பாடி
21. சந்தவாசல்
22. சம்பனூர்
23. சாத்தனூர்
24. சாலமேடு
25. செங்கம்
26. செங்கழுநீர்க்குப்பம்
27. செம்மியமங்கலம்
28. சேப்பிலி
29. சொரகொளத்தூர்
30. தச்சாம்பாடி
31. தாமரைப்பாக்கம்
32. திருமலை
33. திருவண்ணாமலை
34. தென்பள்ளிப்பட்டு
35. தென்மகாதேவமங்கலம்
36. துக்காப்பேட்டை
37. தும்பைக்காடு
38. துரிஞ்சாபுரம்
39. நட்சத்திரக்கோயில்
40. நந்தியம்பாடி
41. நார்த்தாம்பூண்டி
42. நீப்பத்துறை
43. பக்கிரிப்பாளையம்
44. படைவீடு
45. பட்டரைக்காடு
46. பழங்கோயில்.

47. பாடகம்
48. பாணாம்பட்டு
49. பாலூர்
50. பில்லூர்
51. புட்பகிரி
52. பூண்டி
53. பெரியகரம்
54. போளூர்
55. மன்சுராபாத்
56. மண்டகொளத்தூர்
57. மருத்துவாம்பாடி
58. மல்லாப்பாடி
59. மாம்பாக்கம்
60. முடையூர்
61. மேல்பள்ளிப்பட்டு
62. மேல்ராவந்தவாடி
63. மேல்வணக்கம்பாடி
64. வசூர்
65. வடமகாதேவமங்கலம்
66. வளையாம்பட்டு
67. வாசுதேவன்பட்டு
68. வாழியூர்
69. வில்வாரணி
70. வீராணம்
71. வெங்காய வேலூர்
72. வேங்கிக்கால்
73. ஜம்னாமரத்தூர்

<u>செய்யாறு கோட்டம்</u>

1. அக்ராபாளையம்
2. அடையபுலம்
3. அத்திமலைப்பட்டு
4. அப்பநல்லூர் (எ) அம்மாபாளையம்
5. அய்யன்பாளையம்
6. அழகுசேனை
7. அனக்காவூர்
8. அனப்பத்தூர்
9. ஆக்கூர்
10. ஆரணி
11. ஆவணியாபுரம்
12. இஞ்சிமேடு
13. இரகுநாதசமுத்திரம்
14. இராட்டிணமங்கலம்
15. இராமசமுத்திரம்
16. இராமசாணிக்குப்பம்
17. இருப்பன்தாங்கல்
18. இரும்பேடு
19. இளநீர்க்குன்றம்
20. எரையூர்
21. ஏகாம்பரநல்லூர்
22. ஏந்தல்
23. ஏம்பலம்
24. ஒண்ணுபுரம்
25. கண்ணமங்கலம்

26. கிளியாத்தூர்
27. குண்ணகம்பூண்டி
28. குயப்பட்டு
29. கூழப்பந்தல்
30. கொருக்கை
31. கொளத்தூர்
32. கோவிலூர்
33. சளுக்கை
34. சம்புவராயநல்லூர்
35. சித்தாத்தூர்
36. சீஷமங்கலம்
37. சு.தாங்கல்
38. செங்காடு
39. செட்டித்தாங்கல்
40. செப்டாங்குளம்
41. செய்யாற்றைவென்றான்
42. சோகத்தூர்
43. சோமந்தாங்கல்
44. தண்டரை
45. தழுதாழை
46. திரக்கோல்
47. திருக்குரங்கணிமுட்டம்
48. திருப்பனங்காடு
49. திருமால்பாடி
50. திருவோத்தூர்
51. தெள்ளாரம்பட்டு
52. தெள்ளாறு
53. தென்னாங்கூர்
54. தேவிகாபுரம்
55. தூசி
56. நல்லூர்
57. நாவல்
58. நெடுங்குணம்
59. நெல்லி
60. நெற்குணம்
61. பல்லி
62. பாஞ்சறை
63. பாதிரி
64. பாராசூர்
65. பிரம்மதேசம்
66. 5 புத்தூர்
67. புரிசை
68. புலிவாய்
69. பெருங்கட்டூர்
70. பெரும்பள்ளம்
71. மஞ்சம்பட்டு
72. மடம்
73. மருதாடு
74. மழையூர்
75. மாமண்டூர்
76. மும்முனி
77. மூதூர்
78. வண்ணாங்குளம்
79. வந்தவாசி
80. வெட்டியாந்தொழுவம்
81. வெண்குன்றம்
82. வெம்பாக்கம்

## திருவண்ணாமலை கோட்டம்

*** அத்திமூர் :**

இவ்வூர் போளூர்வட்டத்தில், போளூர் ஒன்றியத்தில் உள்ளது போளூரிலிருந்து ஜம்னா மரத்தூர் போகும் சாலையில் 6 கி.மீ. தூரத்தில் உள்ளது. அத்திமூர், களியம், திண்டிவனம் ஆகிய மூன்று ஊர்களும் சேர்ந்து அத்திமூர் ஊராட்சியாகும்.

இவ்வூரில் நிறைய அத்திமரங்கள் இருந்தன. ஆகவே அத்தி ஊர் என அழைக்கப்பட்டு, இப் பொழுது அத்திமூர் என அழைக்கப்படுகிறது. இங்கு வெட்டவெளிச்சாமியார் மடம் இருப்பது குறிப்பிடத்தக்கது. வெட்டவெளிச்சாமியார் என்ற பெரியார் இங்கு சமாதி ஆனார். அவருடைய சமாதி இங்கு உள்ளது. அவருக்கு ஒவ்வொரு வருடமும் வைகாசி மாதம் சிறப்பாக குரு பூஜை நடைபெறுகிறது.

- ஆ. குருசாமி, அத்திமூர்.



*** அந்தனூர் :**

இவ்வூர் செங்கம்வட்டம், செங்கம் ஒன்றியத்தில் உள்ளது. செங்கத்திலிருந்து மேல்பள்ளிப்பட்டு போகும் வழியில் சுமார் 8 கி.மீ. தொலைவில் உள்ளது.

இந்த ஊரில் பெரும்பாலும் திருமண் காப்பு அணிந்து திருமாலை வழிபடும் வைணவர்கள் உள்ளனர். இவ்வூரில் நீண்ட நாள்களுக்கு முன் அனந்தாழ்வார் என்கிற ஆழ்வார் வாழ்ந்து வந்தார். அனந்தன் என்ற இவரது பெயரில் அனந்தனூர் என்று அழைக்கப்பட்டு அது மருவி இப்பொழுது அந்தனூர் என்று வழங்கி வருகிறது என்பர்.

- வெ. கிருஷ்ணமூர்த்தி, மேல்பள்ளிப்பட்டு.

*** அலியாபாத் :**

இவ்வூர் போளூர் வட்டம், போளூர் ஒன்றியத்தில் உள்ளது. போளூரிலிருந்து ஆரணி செல்லும் வழியில் கஸ்தம்பாடிக்கு அடுத்த ஊர் இது. ஆரணியிலிருந்து மேற்கே சுமார் 8 கி.மீ. தொலைவில் உள்ளது.

அலி என்ற முஸ்லீம் பெயரால் ஏற்பட்டது இவ்வூர். ஆகையினால் அலியாபாத் என அழைக்கப்படுகிறது. இவ்வூர் இப்பொழுது களம்பூர் என அழைக்கப்படுகிறது.

- சரவேல், வாழியூர்.

தெலுங்கு மன்னன் குமாரகம்பன் இராம நாராயணன் என்ற சம்புவராய மன்னன் மீது போரிட்டான். போரில் தோல்வி கண்ட சம்புவராய மன்னன் விரிஞ்சிபுரத்திலிருந்து களம்பூர் சென்றான். போர்க்களம் கண்ட ஊரானதால் களம் கண்ட ஊர் என்றானது களம் கண்ட ஊர் நாளடைவில் களம்பூர் என அழைக்கப்படுகிறது.

- வ. செந்தமிழ்ச் செல்வன், கண்ணமங்கலம்.

*** ஆதமங்கலம் :**

இவ்வூர் போளூர் வட்டம், கலசபாக்கம் ஒன்றியத்தில் உள்ளது. போளூரிலிருந்து வீரளூர் செல்லும் வழியில் சுமார் 18 கி.மீ. தொலைவிலும் திருவண்ணாமலையிலிருந்து வீரளூர் செல்லும் வழியில் 45 கி.மீ. தூரத்திலும் உள்ளது.

இவ்வூருக்கு அருகில் உள்ள மலையில் ஆதி கன்னியர் இருந்தனராம். இவ்வூர் எப்பொழுதும் மங்கலகரமாக இருக்குமாம். ஆகவே ஆதி கன்னி மங்கலம் என வழங்கப்பட்டது. பின்னர் ஆதி மங்கலம் என சுருங்கி இப்பொழுது ஆதமங்கலம் என மருவி வழங்கப்படுகிறது.

- வே. சுப்பிரமணி, வேங்கட்டம்பாளையம்.



*** ஆனந்தவாடி :**

இவ்வூர் செங்கம் வட்டத்தைச் சேர்ந்தது. செங்கத்திலிருந்து சிங்காரப்பேட்டை செல்லும் வழியில் சுமார் 11 கி.மீ. தொலைவில் உள்ளது.

இங்கு ஆனந்தவேடியப்பன் கோயில் உள்ளது. ஆனந்தவேடி என அழைக்கப்பட்டு இப்பொழுது ஆனந்தவாடி என அழைக்கப்படுகிறது.

**- சு. சந்திரசேகரன், புதுப்பாளையம்.**

*** இனாம் காரியந்தல்**

திருவண்ணாமலையிலிருந்து வேலூர் செல்லும் சாலையில் 7 வது கி. மீட்டரில் இருநது இடதுபக்கம் திரும்பி 2 கி.மீ. கிராம சாலை வழியே சென்றால் இவ்வூரை அடையலாம். இவ்வூர் துரிஞ்சாபுரம் ஒன்றியத்தில் உள்ளது.

இனாம் காரியேந்தல் - என்பது மருவி இனாம் காரியந்தல் என்று ஆயிற்று. ஏந்தல் என்றால் ஏரி. இவ்வூர் பெரிய ஏரிப் பகுதியாக இருந்துள்ளது. இதனை ஒரு பிரிவு மக்கள் இனாமாகப் பெற்றனர். இனாமாகப் பெறப்பட்ட ஏரிப்பகுதி என்பதைக் குறிக்கவே இக்கிராமம் இனாம் காரியந்தல் எனப்பட்டது.

இப்பகுதி நவாப்புகளின் ஆளுகைக்கு உட்பட்டு இருந்தபோது இப்பகுதி முஸ்லீம்கள்

வரிவிலக்கு பெற்ற காரணத்தால் இனாம் காரியந்தல் எனப் பெயர் வந்தது என்று கூறுவாரும் உளர்.

இப்பகுதியில் முஸ்லீம்கள் வாழ்ந்தார்கள் என்பதற்கு அடையாளமாக தரைமட்டமாகக் காணப்படும் சிதைவடைந்த மசூதியை இன்றும் காணலாம்.

- சொ. சோ. இளங்கோவன், வேங்கிக்கால்.



* எலத்தூர் :

போளூரிலிருந்து செங்கம் செல்லும் சாலையில் 17 கி.மீ. தூரத்தில் சாலையில் இருந்து சுமார் 1 கி.மீ. தொலவில் இவ்வூர் உள்ளது. இங்கு சிவனுக்கு ஆலயம் கட்டப்பட்டுள்ளது. அவ் ஆலயம் சோழ மன்னர்களால் கட்டப்பட்டது. இவ்வூர் போளூர் வட்டம் கலசபாக்கம் ஒன்றியத்தைச் சார்ந்தது.

இங்கு இலந்தை மரங்கள் அதிகமாக இருந்தது. ஆதலால் இலந்தை ஊர் என அழைக்கப்பட்டு அது மருவி எலத்தூர் என வழங்கி வருகிறது.

- இரா. அன்பரசு, போளூர்.

இவ்வூருக்கு எலத்தூர் என்ற பெயர் வந்த காரணத்தைப் புராண வாயிலாகவும் அறியலாம்.

சிவபெருமான் நீள் உருவம் (விசுவரூபம்) எடுத்தார். பிரம்மாவும் திருமாலும் முடி அடி காணப் புறப்பட்டனர். திருமால் அடியைக் காண முடியாமல் திரும்பி விட்டார். சிவன் ஒரு காலை பதித்த பர்வதமலையில் திருமால், கலசம் வைத்து இறைவனை வணங்கினார். அக்கலசம் செய்யாற்றில் அடித்துச் செல்லப்பட்டது. அதிலிருந்த இலை ஒதுங்கிய இடம் இலத்தூர் எனப் பெயர் பெற்றது. பின்னர் அது மருவி எலத்தூர் என வழங்கப் படுகிறது.

இங்குள்ள சிவபெருமானுக்கு சோழ மன்னர்களால் கோயில் கட்டப்பட்டுள்ளது. அவர்களுக்குப் பின்வந்த விசய நகர மன்னர்களும், மற்ற மன்னர்களும் இவ்வாலயத்திற்குத் திருப்பணி கள் செய்துள்ளனர்.

சுமார் 400 ஆண்டுகளுக்கு முன் கன்னட பிராமணர்கள் இவ்வூரில் குடியேறினர். இறைபணி யில் தங்களை இணைத்துக்கொண்டனர். ஆகவே இவ்வூர் பிரதாப தேவராயபுரம் என்று அறிந்தவர் களால் அழைக்கப்படுகிறது. இவ்வூருக்கு அருகில் நட்சத்திரக் கோயில் என்ற முருகன் கோயில் இருக்கிறது.

- வாழியூர், வளவன்



*** ஏரிக் குப்பம் :**

இவ்வூர் போளூர் வட்டம், போளூர் ஒன்றியத்தைச் சார்ந்தது. ஆரணியிலிருந்து படை வீடு செல்லும் சாலையில் 10 கி.மீ. தூரத்தில் சாலையின் தெற்கே 1 கி.மீ. தொலைவில் இவ்வூர் உள்ளது. வேலூரிலிருந்து போளூர் சாலையில் சந்தவாசல் கூட்டுச்சாலையில் இறங்கி அங்கிருந்தும் இவ்வூர் செல்லலாம். அங்கிருந்து சுமார் 8 கி.மீ. கிழக்கே உள்ளது.

இவ்வூரைச் சுற்றிலும் ஊருக்கு அருகாமையில் பல ஏரிகள் உள்ளன. ஆகவே இவ்வூர் ஏரிக்குப்பம் எனப் பெயர் வந்ததாகக் கூறுவர்.

இவ்வூருக்கு என ஒரு ஏரி மேற்கே உள்ளது. அவ்ஏரியின் கரையில் அருள்மிகு செல்லியம்மன் ஆலயம் உள்ளது.

திருநள்ளாற்றுக்கு அடுத்து இங்கு சனீஸ்வரன் கோயில் அமைந்துள்ளது. இக்கோயில் ஏரிக்கரையின் கிழக்கில் உள்ளது. எந்திர வடிவில் உள்ள சனீஸ்வரன் சிலை ஒரே கல்லினால் ஆனது.

நாயக்க மன்னரின் படைத்தலைவர் வையாபுரி என்பவரால் 1535ல் இக்கோயில் கட்டப்பட்டது என்பர்.

படைத்தலைவர் வையாபுரி இவ்வூருக்கு குதிரை மீது வந்தார். இவ்வூரைச் சுற்றி வரும்போது குதிரையின் மீது இருந்து கீழே விழுந்து விட்டார். அவரது இடதுகால் முறிந்து விட்டது.

அப்பொழுது அங்கு வந்த பெண் ஒருவர், 'இங்கு சனீஸ்வரனுக்குச் கோயில் கட்டினால் கால் குணமாகும்' என்று அருள்வாக்கு கூறினார்.

பின்னர் அப்படைத்தலைவர் அவ்வூரில் சனீஸ்வரனுக்குக் கோயில் கட்டினார். அவருடைய காலும் குணம் அடைந்தது.

இவ்வூருக்குத் தெற்கே கமண்டலநதி ஓடு கிறது. அவ்வாற்றின் நீரால் இங்குள்ள ஏரி நிரம்பி வழியும். அதனால் இவ்வூரில் மூன்று போகமும் நெல் விளையும்.

**- சி. இந்திரராசன்,** ஏரிக்குப்பம்.

*** கடலாடி :**

போளூரிலிருந்து செங்கம் செல்வதற்கு மூன்று வழிகள் உள்ளன. முதல் வழி வன்னியனூர், எடப்பிறை, வில்வராணி வழியாக செங்கம் செல்லலாம். இரண்டாவது வழி கலசபாக்கம், வில்வராணி வழியாகவும் செல்லலாம். அடுத்தவழி நாயுடு மங்கலம் கூட்ரோட், நார்த்தாம்பூண்டி, காஞ்சி வழியாகவும் செங்கம் செல்லலாம்.

இம்மூன்று வழிகளில் முதல் இரண்டு வழியாகச் சென்றால் கடலாடியை அடையலாம். திருவண்ணாமலையிலிருந்து கலசபாக்கம், பூண்டி, வில்வராணி வழியாக சென்றாலும் இவ்வூரை அடையலாம்.

இவ்வூர் போளூரிலிருந்து தென்மேற்கே சுமார் 25 கி.மீ. தூரத்தில் உள்ளது.

சிவபெருமான் திருவண்ணாமலை வருவதற்கு கைலாயத்திலிருந்து இறங்கினார். தன் காலை முதலில் பருவதமலையில் வைத்தார். இன்றும் அப்பாதத்தின் அறிகுறி உள்ளதாகக் கூறுகின்றனர். அப்பாதம் அண்ணாமலையார் பாதம் என அழைக்கப்படுகிறது. அப்பாதத்தை வணங்கி விட்டுத் தான் பக்தர்கள் மலை உச்சிக்குச் செல்கின்றனர். அங்கு மல்லிகார்சுனசாமி - பிரம்மராம்பிகை தாயாரையும் வணங்குகின்றனர்.

இம்மலையடிவாரத்தின் வடக்கே இருந்த பழமை வாய்ந்த ஊர் கடவுள் பாதம்பட்ட மலையடி என்றும் கடவுளடி என்றும் வழங்கப்பட்டது. பின்னர் கடலாடி என மருவி வழங்கப்பட்டு வருகிறது.

இப்பேரூரில் தொன்றுதொட்டே உள்ள வன்னீஸ்வரரை வழிபட்ட பிறகுதான் நீர் வேண்டி முருகப்பெருமான் தன் வீர வேலை செங்கண்

மாமலை நோக்கி வீசினார் என்று தலபுராணம் கூறுகிறது.

- **மாதி சி. குப்பன்,** தென்மகாதேவமங்கலம்.

*** கணேசபுரம் :**

இவ்வூர் வாழியூரிலிருந்து தென்மேற்கே சுமார் 1 கி.மீ. தொலைவிலும், படைவீட்டிலிருந்து வடக்கே சுமார் 2 கி.மீ. தொலைவிலும் உள்ளது.

சம்புவராயர் படை வீட்டில் கோட்டை கட்டி ஆண்டனர். அக்கோட்டைக்குள் செல்ல கிழக்கிலும் வடக்கிலும் இரண்டு புறவாயில்கள் இருந்தன. வடக்கே இருந்த வாயில் தன்மம் தாங்கியவன் வாயில் எனப்பட்டது. இவ்வாயிலுக்குள் நுழையுமிடத்தில் 6½ அடி உயரமுள்ள ஒரு பெரிய கல் பிள்ளையார் உள்ளது. இதனைக் கோட்டை நகரத்தின் காவல் தெய்வமாக வழிபட்டனர். இப்பிள்ளையார் கோயிலுக்கு அருகில் ஒரு ஊர் தோன்றியது அதற்கு கணேசபுரம் எனப் பெயர் ஏற்பட்டது. பிள்ளையாருக்கு கணேசன் என்று ஒரு பெயர் உண்டல்லவா?

முன்பு இதனை சூரியன் பார்க்காத ஊர் என்றனர். ஏன்? சூரியன் உதித்ததும் சுமார் 2 மணி நேரம் இவ்வூருக்குள் சூரியன் ஒளி விழுவதில்லை. காரணம்? வாழியூருக்கு தெற்கேயுள்ள வெள்ளி மலை என்ற ஒரு பெரிய மலை அவ்வொளியை

மறைத்து விடுகிறது. ஆகவேதான் இப்பெயர் ஏற்பட்டது.

பாழடைந்த நிலையிலிருந்த இக்கோயிலை (பிள்ளையார் கோயிலை) சென்னை டி.வி.எஸ். குரூப் புதுப்பித்து வழிபாட்டுக்குரிய தலமாக ஆக்கியுள்ளனர். கோயில் அருகே பூந்தோட்டமும் அமைத்திருக்கின்றனர். இங்கு சென்று இக்கோயிலிலுள்ள விநாயகரை வழிபடும்போது மனம் அமைதி அடைகின்றது.

- இராச. பேரரசு. வாழியூர்.



*** கண்ணனூர் :**

இவ்வூர் போளூர் வட்டம் சேத்துப்பட்டு ஒன்றியத்தைச் சேர்ந்தது. இவ்வூர் சேத்துப் பட்டுக்கு வடக்கில் சுமார் 2 கி.மீ. தொலைவில் உள்ளது.

இவ்வூர் பாரதத்தில் வரும் இறைவன் கண்ணனின் பெயரால் ஏற்பட்ட ஊராகும்.

- **இரா.வ. கமலக்கண்ணன்,** வந்தவாசி.

*** கரிமலாப்பாடி :**

இவ்வூர் செங்கம்வட்டம், செங்கம் ஒன்றியத்தைச் சேர்ந்தது. கரிய யானைகளைப் பாதுகாக்க

பாடி வீடுகள் இருந்ததால் இவ்வூர் கரிமலைப்பாடி என அழைக்கப்பட்டு இப்பொழுது கரிமலாப்பாடி என மருவி வழங்குகிறது.

கரி என்றால் யானை. யானைகளைக் காக்க பாடி வீடுகள் இருந்த இடம் என்றும் கூறலாம்.

- வாழியூர், வளவன்.

*** கலசபாக்கம்**

இவ்வூர் போளூர் திருவண்ணாமலை சாலையில் கலசபாக்கம் கூட்டுச்சாலையிலிருந்து மேற்கே சுமார் 1 கி.மீ. தூரத்தில் உள்ளது. போளூரிலிருந்து செங்கம் செல்லும் பேருந்துகள் இவ்வூர் வழியாகவும் செல்லுகின்றன.

கலசபாக்கம் அருகில் சேயாறு ஓடுகிறது. ஒரு காலத்தில் இவ்வாற்றின் வெள்ளத்தில் மூன்று தங்கக் கலசங்கள் உந்தப்பட்டு இவ்வூர் அருகில் கரையில் ஒதுங்கியது. இதனைப் பார்த்த ஒரு சிலர் இக்கலசங்களை எடுத்துச் சென்று அப்பொழுது திருவண்ணாமலையை ஆட்சி செய்த மன்னனிடம் கொடுத்து விட்டனராம்.

கலசங்கள் ஒதுங்கிய இடத்தில் ஊர் தோன்றியது. ஆகவே இவ்வூர் கலசபாக்கம் என அழைக்கப்பட்டது. இந்நிகழ்ச்சி கிருஷ்ண

தேவராயன் பெயரன் பிரபு மகாராஜா காலத்தில் நிகழ்ந்ததாகக் கூறுவர்.

- ஆ. குருசாமி, அத்திமூர்.

*** கல்வாசல் :**

இவ்வூர் சந்தவாசலுக்கு தெற்கே உள்ளது. போளூரிலிருந்து வேலூர் வரும் வழியில் போளூரிலிருந்து சுமார் 6 கி.மீ. தொலைவில் பேருந்து நிறுத்தத்திலிருந்து மேற்கே சுமார் 2 கி.மீ. தூரத்தில் உள்ளது. இவ்வூர் போளூர் ஒன்றியத்தைச் சேர்ந்தது.

இவ்வூர் அக்காலப் படைப்பாசறையாகவோ போர் நடந்த இடமாகவோ இருந்திருக்க வேண்டும். முதலில் களம் வாசல் என அழைக்கப்பட்டு அது மருவி கல்வாசல் என அழைக்கப்படுகிறது என்பர்.

- சரவேல், வாழியூர்.

*** காள சமுத்திரம் :**

இவ்வூர் போளூர் வட்டம், போளூர் ஒன்றியத் தைச் சேர்ந்தது. கண்ணமங்கலத்திலிருந்து படைவீடு செல்லும் வழியில் சுமார் 6 கி.மீ. தொலைவிலும் படை வீட்டிலிருந்து சுமார் 5 கி.மீ. தொலைவிலும் உள்ளது.

படை வீட்டை ஆண்ட சம்புவராய மன்னர் கள் விளைந்த தானியங்களை கலன்களில் (செஞ்சிக் கோட்டையில் உள்ளது போல்) சேமித்து இருப்பு வைத்தனர். தானியகலன்கள் இவ்வூர் முழுவதும் நிறைந்து கடல்போல் காட்சியளித்ததாம். அதனால் இவ்வூருக்கு கலன் சமுத்திரம் என பெயர் வந்ததாம். நாளடைவில் அது மருவி காளசமுத்திரம் என்று ஆயிற்று.

இவ்வூரின் மேற்கே உள்ள பெரிய ஏரியில் மழை நீர் தேங்கி சமுத்திரம் போல் காட்சியளித்த தாம். ஆகவே காளசமுத்திரம் எனப் பெயர் வந்ததாகவும் கூறுவர்.

- வ. செந்தமிழ்ச் செல்வன், கண்ணமங்கலம்.

படைவீடு கோட்டையைக் கைப்பற்ற தெலுங்கர்கள் நினைத்தனர். அவர்கள் விரிஞ்சிபுரத் திலிருந்து அரசபாட்டை வழியாக காளசமுத்திரம் அடைந்தனர். அங்கு அப்படை சமுத்திரம் போல் காட்சியளித்தது. அவ்விடம் களசமுத்திரம் என அழைக்கப்பட்டது. அது மருவி காளசமுத்திரம் என வழங்கலாயிற்று.

- சரவேல், வாழியூர்.

*** குண்ணத்தூர் :**

இவ்வூர் போளூர் வட்டம், போளூர் ஒன்றியத்தைச் சேர்ந்தது. போளூருக்கு வடக்கே சுமார் 3 கி.மீ. தொலைவில் உள்ளது.

இங்கு குன்றம் ஒன்று இருக்கிறது. ஆகவே குன்றம் ஊர் என்றாகி பிறகு குண்ணம் ஊர் என அழைக்கப்பட்டு இப்பொழுது குண்ணத்தூர் என அழைக்கப்படுகிறது. இவ்வூருக்கு இராசகம்பீர சம்புவராய மன்னர் இராசகம்பீரநல்லூர் என தன் பெயரை வைத்ததாகவும் பின்னாளில் அது குண்ணத்தூர் என அழைக்கப்படுவதாகவும் கூறுவர்.

இங்குள்ள குன்றின்மீது முருகன் கோயில் உள்ளது. இங்குள்ள முருகப்பெருமானுக்கு சிறப்பான பூசை நடக்கிறது.

- சரவேல், வாழியூர்.

*** குயிலம் :**

இவ்வூர் செங்கத்திலிருந்து வடக்கே சுமார் 6 கி.மீ. தொலைவிலும் புதுப்பாளையத்திலிருந்து சுமார் 9 கி.மீ. தொலைவிலும் உள்ளது. இது செங்கம் வட்டம் செங்கம் ஒன்றியத்தைச் சேர்ந்தது.

இங்கு நரம்புக் கருவிகளை இசைக்கும் பாணர் வாழ்ந்ததால் குயிலுவம் எனப்பட்டு இப்பொழுது குயிலம் என அழைக்கப்படுகிறது. (குயிலுவம் - நரம்புக் கருவியால் பாடுதல்; குயிலுவர் - நரம்புக்கருவிக்கு உரியவர்.)

- வாழியூர், வளவன்

✪ ✪ ✪

*** குருவி மலை**

இவ்வூர். போளூர் திருவண்ணாமலை தேசிய நெடுஞ்சாலையில் போளூருக்கு தெற்கே 3 கி.மீ. தொலைவில் உள்ளது. இவ்வூர் போளூர் வட்டம் போளூர் ஒன்றியத்தைச் சேர்ந்தது. சேயாற்றின் வடகரையில் அமைந்துள்ள தலம் குருவிமலை.

குருவிமலை கரைகண்ட ஈசுவரர் கோயில் கொண்டுள்ள தலம். இப்பகுதி மாமரங்கள் சூழ்ந்த சோலையில் அமைந்திருப்பதால் ஆம்பிரவனம் என்றும் இதற்குப் பெயர். ஆம்பிரம் என்றால் மாமரம். திருமாந்துறையில் கோயில் கொண்டிருக்கும் சுவாமி ஆம்பிரவனேசர் என அழைக்கப்படுகிறார்.

இவ்வூர் காஞ்சிக்கு நேர் ஈசானியத்தில் அமைந்துள்ளது. ஆகவே குருமூலை என வழங்கப்பட்டு குருவி மலை என மருவி வழங்கப்படுகிறது.

இங்கு சிறப்பான சிவலாயம் உள்ளது. இது 10 ஆம் நூற்றாண்டில் சோழமன்னர்களால் கட்டப்பட்டது. தற்சமயம் மூலவர் சன்னதி தவிர மற்ற எல்லாமே அழிந்து விட்ட நிலையில் உள்ளது.

- சரவேல், வாழியூர்.

*** கேட்டவரம்பாளையம் :**

இவ்வூர் போளூர் வட்டம், கலசபாக்கம் ஒன்றியத்தைச் சேர்ந்தது. திருவண்ணாமலை யிலிருந்து சுமார் 43 கி.மீ. தொலைவிலும், போளூரிலிருந்து சுமார் 16 கி.மீ. தொலைவிலும் உள்ளது.

இவ்வூரின் எல்லைப்பகுதியில் ஒரு குன்று உள்ளது. அக்குன்றின்மீது பெருமாள்கோயில் உள்ளது. அவ்இறைவனுக்கு பிரசன்னவேங்கடேசப் பெருமாள் என்று பெயர். இங்குள்ள மக்கள் தங்கள் குறைகளை அப்பெருமாளிடம் கூறுவர். அவரும் இவர்களுடைய குறைகளைப் போக்குவார். அப்பெருமாள் கேட்ட வரம் தரும் பெருமாள் எனவே அழைக்கப்பட்டார். அங்கு அமைந்த கிராமத்திற்கும் கேட்டவரம்பாளையம் எனப் பெயர் உண்டாயிற்று. இங்கு வருடந்தோறும் இராமநவமி விழா பத்து நாட்கள் நடப்பது குறிப்பிடத்தக்கது. இவ்விழாவிற்கு தமிழகத்தின் பல மூலைகளில் இருந்து அன்பர்கள் பேசவும், கண்டுகளிக்கவும் வருகின்றனர்.

- வே. சுப்பிரமணி, ஆதமங்கலம்.



*** கோளாப்பாடி :**

இவ்வூர் செங்கம் திருவண்ணாமலை சாலையில் உள்ளது. செங்கத்திலிருந்து சுமார் 21 கி.மீ. தொலைவிலும், தி.மலையிலிருந்து சுமார் 10 கி.மீ. தொலைவிலும் உள்ளது.

கையில் கொம்பு பிடித்து இரவில் காவல் காத்தவர்கள் இங்கு வாழ்ந்து வந்தனர். ஆகவே கோலர்பாடி என அழைக்கப்பட்டு இப்பொழுது கோளாப்பாடி என மருவி அழைக்கப்படுகிறது. (கோலர் - கோலை உடையவர்.)

- வாழியூர், வளவன்.



*** சந்தவாசல்**

இவ்வூர் வேலூர் - போளூர் சாலையில் வேலூரிலிருந்து சுமார் 31 கி.மீ. தொலைவிலும் ஆரணியிலிருந்து படைவீடு செல்லும் சாலையில் சுமார் 15 கி.மீ. தூரத்திலும் உள்ளது.

கி.பி. 14 ஆம் நூற்றாண்டில் துங்கபத்ரா நதிக்கரையில் ஹம்பியில் விஜயநகரப் பேரரசை புக்கர் என்பவன் உருவாக்கினான். புக்கரின் மகன் குமாரகம்பணன். இவன் கன்னட நாட்டில் முன்பாகல் நகரைத் தலைநகராகக் கொண்டு ஆண்டான். மாலிக்காபூர் என்பவன் தென்னிந்தியா

வின் மீது படையெடுத்து பெரும்பாலான பகுதி களைக் கைப்பற்றி சுல்தான் ஆட்சியை ஏற்படுத்தினான்.

தென்னிந்தியாவில் சுல்தானின் ஆதிக்கத்தை அழித்து இந்து சாம்ராஜ்யத்தை நிறுவும்படியும் அதனை விரிவுபடுத்தும்படியும் புக்கர் தன் மகன் குமார கம்பணனுக்கு ஆணையிட்டார்.

இந்த நேரத்தில் விரிஞ்சிபுரத்தை தலை நகராகக் கொண்டு இராஜகம்பீர நாட்டை 'இராஜநாராயணன் வென்று மண்கொண்டான்' என்ற சம்புவராய மன்னன் (கி.பி. 1363) ஆண்டு வந்தான்.

குமார கம்பணன், இராஜநாராயணன் மீது போர்த்தொடுத்தான். இராஜநாராயணன் விரிஞ்சி புரத்தில் தோற்றான். களம்பூர் சென்றான். அங்கு நடந்த போரிலும் தோற்றான். இப்பொழுது கல்வாசல் என்று அழைக்கப்படும் களவாசல் சென்றான். அங்கு நடந்த போரிலும் தோற்றான்.

கல்வாசலில் இருந்து சந்தவாசல் என இப்பொழுது அழைக்கப்படும் இடம் சென்றான். அங்கும் தோற்றான். பின்னர் இராஜகம்பீர மலையில் பாதுகாப்பாக வாழ்ந்தான்.

எல்லா இடங்களிலும் வென்ற குமார கம்பணன் மதுரை செல்லத் தொடங்கினான்.

அவ்வாறு செல்லும்போது இராசநாராயணனி டமே ஆட்சியை ஒப்படைத்தான். (ஆதாரம் சீனிவாச சாஸ்திர சரித்திரம்)

சந்தவாசல் என அழைக்கப்படும் அவ்விடம் நடந்த போரில் சேனையிடமிருந்து மீண்டும் ஆட்சியை மீட்டதால் இவ்வூர் சேனைக்கு மீண்டான் வாசல் என வழங்கலாயிற்று. பின்னர் சந்தவாசல் என மருவியது.

நீலகண்ட சாஸ்திரி சரித்திரப்படி போரில் இராஜ நாராயணன் போரில் மாண்டு விட்டதாகத் தெரிகிறது. எனவே சேனைக்கு மாண்டான் வாசல் என இவ்வூர் வழங்கியது என்பார் சிலர்.

சேனைக்கு மீண்டான் வாசல், மாண்டான் வாசல் என்பவையே திரிந்து சேனை வாசல், சேனவாசல், சந்தவாசல் என மாறியுள்ளது.

சந்தவாசல் கங்கையம்மன் கோயிலில் உள்ள 17-ஆம் நூற்றாண்டு கல்வெட்டில் சேனைக்கு மீண்டான் வாசல் என்ற வரி உள்ளது.

இன்றைய செய்யாறு கோட்டம்போல் பல்குன்றகோட்டம், ஆரணி தாலுக்கா போல் தச்சூர் முருகமங்கலம் இருந்துள்ளது.

திருமலை நாயக்கரின் சிற்றரசன் மல்லப்ப நாயக்கர் தச்சூர் நாட்டை ஆண்டபோது சந்தவாசல் கங்கையம்மன் கோயிலுக்கும்

பெருமாள் கோயிலுக்கும் விளக்கேற்றி வைக்க செல்லக வீரப்பன். தாங்கல் என்ற கிராமத்தை நிவந்தம் (தானம்) விட்ட செய்தி கல்வெட்டில் உள்ளது. செட்டித்தாங்கல் என்கிற சேதரம்பட்டே செல்லக வீரப்பன் தாங்கல் என அறியலாம். சந்தவாசல் அருகே இன்றும் தச்சூர், முருகமங்கலம் செட்டித்தாங்கல். களம்பூர், கல்வாசல் ஊர்கள் உள்ளது குறிப்பிட.த்தக்கது.

- வ. செந்தமிழ்ச் செல்வன்,
கண்ணமங்கலம்.

*** சம்பனூர் :**

இவ்வூர் சேத்துப்பட்டு ஒன்றியம் ஒதல வாடியை ஒட்டியுள்ள சிற்றூராகும்.

வீரசம்பன் என்ற சம்புவராய மன்னன் பெயரால் ஏற்பட்டதே இவ்வூர்.

- வாழியூர் வளவன்.

*** சாத்தனூர் :**

இவ்வூர் திருவண்ணாமலைக்கு மேற்கே சுமார் 25 கி.மீ. தொலைவில் உள்ளது.

ஊருக்கு வெளியே ஐயனார் என்ற காவல் தெய்வம் உள்ளது. அத்தெய்வத்திற்கு சாத்தன் என்று பெயர். ஆகவே சாத்தன் + ஊர் = சாத்தனூர் என்று அழைக்கப்படுகிறது.

இவ்வூரிலிருந்து 2 கி.மீ. தூரத்தில் வட பெண்ணை ஆற்றில் அணை கட்டப் பட்டுள்ளது. அவ்வணை நீர்பாசானத்திற்கு மிகவும் பயன்படு கிறது. அவ்வணையையும், அங்கு அமைந்துள்ள பூங்காவையும் பார்க்க சுற்றுலா பயணிகள் நிறைய பேர் வருகின்றனர்.

- இரா. வ. கமலக்கண்ணன், வந்தவாசி.

*** சாலமேடு :**

இவ்வூர் போளூர் வட்டம் கலசபாக்கம் ஒன்றியம் கேட்டவரம் பாளையத்தை அடுத்து உள்ளது. போளூரிலிருந்து 15 கி.மீ. தொலைவிலும் தி-மலையிலிருந்து 45 கி.மீ. தொலைவிலும் உள்ளது. கேட்டவரம் பாளையத்திலிருந்து வடக்கே சுமார் 1 கி.மீ. தொலைவிலும் உள்ளது. கேட்டவரம் பாளையத் தின் மதுரா கிராமம் இது ஆகும்.

இங்குள்ள கடகமலையில் பிரசன்ன வேங்கடேச பெருமாள் ஆலயம் உள்ளது. கடகம் என்பதற்கு நிலையாகத் தாங்கிய இடம் என்று பொருள். சீனிவாசப் பெருமாள் இம்மலையில் நிரந்தரமாகத் தங்குவதற்குத் திருவுள்ளம் கொண்ட தால் கடகமலை என்ற பெயர் உண்டாயிற்று என்பர். இம்மலையின் உயரம் சுமார் 650 அடி.

சாலையின் ஓரம் இருப்பதாலும், இம்மலை மேடாக தெரிவதாலும் இம்மலைக்கு அருகில்

உள்ள ஊருக்கு சாலமேடு என பெயர் வந்ததாகக் கூறுவர்.

ஜவ்வாது மலையில் வாழும் மலைவாழ் மக்களுக்கு இப்பெருமாள் குலதெய்வமாம். ஆகையினால் மலைவாழ் மக்கள் ஆண்டுதோறும் இங்கு வந்து இப்பெருமாளை வழிபட்டு காணிக்கை செலுத்தி விட்டுச் செல்கின்றனர்.

- வாழியூர் வளவன்

*** செங்கம் :**

இந்நகரம் செங்கம் வட்டத்தைச் சேர்ந்ததாகும். திருவண்ணாமலையிலிருந்து சிங்காரப்பேட்டை ஊத்தங்கரை, பெங்களூர் செல்லும் வழியில் உள்ளது. போளூரிலிருந்து புதுப்பாளையம் வழியாகப் பேருந்துகள் அடிக்கடி செங்கம் செல்கின்றன. போளூரிலிருந்து சுமார் 48 கி.மீ. தொலைவில் உள்ளது.

இவ்வூரில் வேணுகோபால் பார்த்தசாரதி திருக்கோயில் உள்ளது. இக்கோயில் மிகவும் சிறப்பு வாய்ந்தது. இவ்வூரிலுள்ள இறைவன் பெயரால் செங்கண்மால் நகர் என்று வழங்கி, இப்பொழுது செங்கம் என சுருங்கி அழைக்கப்படுகிறது.

- வெ. கிருஷ்ணமூர்த்தி, மேல்பள்ளிப்பட்டு.

பத்துப்பாடடில் கடைசி பாட்டு மலைபடு கடாம். அதில் பாட்டுடைத்தலைவன் நன்னன்சேய். அவனுடைய தலைநகரமாக இது விளங்கியிருக் கிறது. மலைபடுகடாம் இவ்வூரை, 'பல்குன்ற கோட்டத்துச் செங்கண்மால் என்றும், கல்வெட்டு கள், "ஜெயம்கொண்ட சோழ மண்டலத்துப் படைவீட்டு ராஜ்ஜியம் பல்குன்றத்துக்கோட்டத்து ஆடையூர் நாட்டு செங்கண்மா என்றும், சில இடங்களில் செங்கண்மா பட்டினம்' என்றும் கூறுகிறது. செங்கத்தின் வேறு பெயர் 'சக்கதபுரி' என்று கல்வெட்டு கூறுகிறது.

-வாழியூர் வளவன்.

* செங்கழுநீர் குப்பம் :

முன்னாளில் செங்கழுநீர் குப்பம் என்று அழைக்கப்பட்ட இவ்வூர் இப்பொழுது குப்பம் என்றும், கொளத்தூருக்கு அண்மையில் இருப்ப தால் கொளத்தூர் குப்பம் என்றும் அழைக்கப் படுகிறது. போளூர் ஒன்றியத்தைச் சேர்ந்தது இவ்வூர்.

இவ்வூர் கண்ணமங்கலத்திற்கு தென்மேற்கே சுமார் 4 கி.மீ.தொலைவில் உள்ளது.வேலூரிலிருந்து படை வீட்டிற்கு மூன்றுவழிகளில் செல்லலாம். ஒன்று வேலூரிலிருந்து கண்ணமங்கலம், குப்பம், காளசமுத்திரம் வழி. இரண்டு வேலூர் கண்ண மங்கலம் வாழியூர் அனந்தபுரம் வழி. மூன்றாவதாக

வேலூரிலிருந்த சந்தவாசல்வழி.

இவற்றுள் முதலில் கூறியவழியில் இருப்பது குப்பம் என்ற ஊர். அதுவே செங்கழுநீர் குப்ப மாகும். ஆரணியிலிருந்தும் இவ்வூருக்கு பேருந்து வசதி உண்டு.

இங்குள்ள நீர் நிலைகளில் செங்கழுநீர் பூக்கள் அதிகமாக இருந்ததால் இப்பெயர் பெற்றது. அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில் குளத்தில் நிறைய இப்பூக்கள் இருந்ததாகக் கூறுவர்.

இங்குள்ள பூக்களை எடுத்துச் சென்றுதான் படைவீடு அருள்மிகு இரேணுகாம்பாள் அம்ம னுக்கு காலை பூசை செய்வார்களாம்.

- வாழியூர் வே. இராசவேலன்

- வ. செந்தமிழ்ச் செல்வன்,
கண்ணமங்கலம்.

*** செம்மிய மங்கலம் :**

இவ்வூர் போளூர் வட்டம் சேத்துப்பட்டு ஒன்றியத்தைச் சேர்ந்தது. போளூரிலிருந்து சேத்துப் பட்டு போகும் சாலையில் தெற்கே மட்டப் பிறையூர், அல்லியானமங்கலம் ஊர்களை அடுத்து இவ்வூர் உள்ளது.

தமிழ்நாட்டைச் சேர, சோழ, பாண்டியர் ஆகிய மூவேந்தர்கள் ஆட்சி செய்தனர். அவர்களுள் சோழர் குடி பல சிறப்புப் பெயர்களைப் பெற்று

இருந்தது. செம்பியன், வளவன்,சென்னி என்பன சோழர்களின் சிறப்புப் பெயர்களாகும்.

'சென்னி, வளவன், செம்பியன், கிள்ளி.... சோழன் பெயரே' என பிங்கல நிகண்டு பேசும்.

சோழர் குடியின் சிறப்புப் பெயரான செம்பியன் என்பதைச் சொல்லி மகிழ்வது இவ்வூரின் பெயராகும். செம்பியமங்கலம் என்ற இவ்வூரின் பெயர் திரிந்து செம்மியமங்கலம் என வழங்கி வருகிறது.

- வாழியூர் வே. இராசவேலன்.



*** சேப்பிலி :**

இவ்வூர் போளூர் வட்டம், ஜப்வாது மலை ஒன்றியத்தைச் சேர்ந்தது. ஜவ்வாது மலையின் உச்சியில் உள்ளது.

சேண் என்றால் நெடுந்தூரம் என்றும், புலி என்றால் வேங்கை மரம் என்று பொருள். கண்ணுக்கு எட்டிய தூரம் வேங்கை மரங்கள் மிகுந்துள்ளது. ஆகவே சேண்புலி என்று வழங்கியது. அது மருவி சேப்பிலி என்று வழங்கப்படுகிறது.

- ஆ. குருசாமி, அத்திமூர்.

*** சொர குளத்தூர் :**

இவ்வூர் துரிஞ்சாபுரம் ஒன்றியத்தைச் சேர்ந்தது. திருவண்ணாமலை வேலூர் சாலையில் நாயுடு மங்கலத்திலிருந்து சுமார் 2½ கி.மீ. தொலைவில் இவ்வூர் அமைந்துள்ளது. சுரர் குளத்தூர் என்பது மருவி சொரகுளத்தூர், சொர கொளத்தூர் என்று ஆயிற்றாம்.

சுரர் - தேவர். 'இங்குள்ள குளத்தில் தேவர்கள் வந்து நீராடினராம். ஆகவே சுரகுளத்தூர் என்று பெயர் வந்தது.

இந்தக் குளம் பல ஆண்டுகளாகப் பயன்பட்டு வந்ததாம். இப்பொழுது பயன்படவில்லை என்கின்றனர். இக்குளத்தைச் சுற்றி அடர்ந்த காடு உள்ளது.

இக்குளத்தில் இரும்பைப் பொன்னாக மாற்றும் மூலிகைச் செடி இருந்ததாம். இப்பொழுது இல்லையாம். இவ்வூரில் பாழடைந்த ஈஸ்வரன் கோயில் ஒன்று உள்ளது. இப்பகுதியில் முதுமக்கள் தாழி கிடைத்துள்ளதாகவும் கூறுகின்றனர்.

- சொ.சே. இளங்கோவன், வேங்கிக்கால்.

*** தச்சாம்பாடி :**

இவ்வூர் போளூர் வட்டம், சேத்துப்பட்டு ஒன்றியத்தில் உள்ளது. போளூரிலிருந்து சேத்துப்

பட்டு போகும் வழியில் தேவிகாபுரத்திலிருந்து 5 கி.மீ. தூரத்தில் உள்ளது. போளூரிலிருந்து 15 கி.மீ. தொலைவில் உள்ளது.

இங்கு மரவேலை செய்பவர்கள் (தச்சர்) அதிகமாக இருந்தனர். ஆகவே தச்சாம்பாடி என பெயர் வந்திருக்கலாம்.

- இரா. வ. கமலக்கண்ணன், வந்தவாசி.



*** தாமரைப் பாக்கம் :**

இவ்வூர் செங்கம் வட்டம், புதுப்பாளையம் ஒன்றியத்தில் உள்ளது. போளூருக்கு மேற்கே சுமார் 22 கி.மீ. தூரத்தில் உள்ளது. போளூரிலிருந்து செங்கம் செல்லும் சாலையில் தென் மகாதேவ மங்கலம் அடுத்து இவ்வூர் அமைந்துள்ளது. திருவண்ணாமலையிலிருந்து காஞ்சி வரும் சாலையில் இருந்தும் இவ்வூர் செல்லலாம். காஞ்சியிலிருந்து இவ்வூருக்கு சிற்றுந்து வசதி உண்டு.

திருமாலுக்கும், பிரம்மாவுக்கும் யார் பெரியவர் என்ற போட்டி எழுந்தது. இருவரும் சிவனிடம் சென்றனர். சிவன் ‘யார் என்னுடைய அடி, முடியைக் காண்கின்றனரோ அவர்தான் பெரியவர்’ என்று கூறி அக்னி பிழம்பாக நின்றார்.

திருமால் அடியைக் காணவும், பிரம்மா முடியைக் காணவும் புறப்பட்டனர். இருவராலும் அடியையோ முடியையோ காண முடியவில்லை. திருமால் மட்டும் திரும்பி வந்து விட்டார்.

சிவபெருமான் கைலையிலிருந்து வரும்போது முதல் பாதத்தை பர்வதமலையில் வைத்தார். திருமால் அவ்வாறு வைத்த பாதத்துக்கு அருகே கலசம் வைத்து வழிபாடு செய்தார். அக்கலசம் சேயாற்றின் வெள்ளத்தில் அடித்துச் செல்லப் பட்டது.

அக்கலசத்திலிருந்து தாமரைப் பூ ஒதுங்கிய இடம் தாமரைப்பாக்கம் எனப்பட்டது.

- மாதி. சி. குப்பன், தென்மகாதேவமங்கலம்.

இத்தலத்தில் அக்னீஸ்வரர் கோயில் கொண்டு இருக்கிறார். இத்தலத்தில் சோழர்களின் 10ஆம் நூற்றாண்டு கல்வெட்டுக்கள் பல உள்ளன. அக்கல்வெட்டில், குலோத்துங்க சோழனால் இக்கோயில் கட்டடப்பட்டது என்று எழுதப் பட்டுள்ளது.

இத்தலத்தில் மகாவிஷ்ணுவின் கோயிலுண்டு. அரியும் சிவனும் இணைந்த அருள்தரும் தலங்களுள் இதுவும் ஒன்று. பக்தர்கள் இத்தலத்திற்கு வந்து வழிபட்டால் தீராத வினைகளும் தீரும். அது

மட்டுமா? வழிபடுபவரின் முன்கோபம், தீராத பகை, நல்ல பண்புள்ளவர்களாக அவர்களை மாற்றும்.

- வாழியூர் வளவன்.

*** திருமலை :**

போளூருக்கு கிழக்கே திருமலை என்னும் குன்று ஒன்று உண்டு. அது வைகாவூரை அடுத்து இருப்பதால் வைகைத் திருமலை எனவும் வழங்கப் படுகிறது. போளூரிலிருந்து ஆரணிக்குச் செல்லும் வழியில் வடமாதி மங்கலம் கூட்டுச்சாலை உள்ளது. அங்கிருந்து கிழக்கே சுமார் 7 கி.மீ. சென்றால் இம்மலையை அடையலாம். களம்பூரிலிருந்து திருமலை சுமார் 12 கி.மீ. தொலைவு ஆகும். இவ்வூர் சேத்துப்பட்டு ஒன்றியத்தைச் சார்ந்தது.

திருஎன்றால் அழகு, செல்வம், தெய்வீகம், சிறப்பு, பொலிவு என பல பொருள்கள் உண்டு. இங்கு இருக்கும் மலை அழகாக இருப்பதால் திருமலை என பெயர் வந்ததாகக் கூறுவர். இம்மலையை ஒட்டிய ஊருக்கும் திருமலை என்று பெயர் வந்ததாம்.

**- வாழியூர் வே. இராசவேலன்.**

திருவேங்கடவன் எழுந்தருளி இருக்கும் திருமலைக்குச் சமமாக ஜைனர்களால் கொண் டாடப்படும் மலை இது. சமணர்களின் ஆலயம்

உள்ளது. பார்ச்சுவநாதரின் மிகப் பெரிய உருவச் சிலை உள்ளது. முதல் இராசராச சோழனின் தமக்கை குந்தவை பிராட்டியார் இவ் ஆலயத்தை அமைத்ததாகக் கூறுவர். ஆகவே குந்தவை ஜீனாலயம் என இவ்வாலயம் வழங்குகிறது. 1988ல் இவ்ஆலயம் புதுப்பிக்கப்பட்டது.

- இரா. வ. கமலக்கண்ணன், வந்தவாசி.

*** திருவண்ணாமலை :**

இந்நகரம் திருவண்ணாமலை மாவட்டத்தின் தலை நகரம், விழுப்புரம் காட்பாடி புகை வண்டி வழியில் உள்ளது.

திருவண்ணாமலை உள்ளிட்ட சில சுற்றுப்புற ஊர்களும் இணைந்த இப்பகுதி ஒரு காலத்தில் அண்ணா நாடு என அழைக்கப்பட்டது. அண்ணா நாட்டில் உள்ள மலை அண்ணாமலை என அழைக் கப்பட்டது. இவ்வூரின் கண் அமைந்த இறைவனுக் கும், ஊருக்கும் அண்ணாமலை என்றே வழங்கப் பட்டது. திரு என்ற சிறப்புச் சொல் சேர்த்து இவ்வூர் திருவண்ணாமலை என அழைக்கப்படுகிறது.

- சொ. சேகர், திருவண்ணாமலை.

திருவண்ணாமலை! திரு என்றால் தெய்வம் என்று பொருள். அண்ணா என்றால் உயர்ந்த என்பது பொருள் மலை என்றால் மலைக்க

வைப்பது என்றும், மயங்க வைப்பது என்றும் பொருள் கொள்ளலாம்.

இதைவிட உயர்ந்தமலைகள் பல இருந்தாலும் இதற்கு மட்டும் அண்ணாமலை என்ற பெயர் ஏன் வர வேண்டும்?

முன்பு ஒரு காலத்தில் பிரம்மனுக்கும் திருமாலுக்கும் யார் பெரியவர் என்ற சர்ச்சை உண்டாயிற்று. அப்பொழுது சிவபெருமான் அங்கு எழுந்தருளி, 'யார் என்னுடைய முடியையும் அடியையும் காண்கின்றார்களோ அவர்தான் பெரியவர்' என்றார்.திருமாலும் பிரமனும் அடி முடி காணப் புறப்பட்டனர்.சிவபெருமான் பெரிய நெருப்பு மலை உருவாக நின்றாராம். தேவர்கள் அனைவரும், இவ்வாறு மலை உருவில் நின்றால் நாங்கள் எப்படி வணங்குவது? என்று கேட்க அந்த மலை லிங்கமாக மாறியதாம்.

ஆகவே அம்மலைக்கு திருஅண்ணாமலை என்ற பெயரும் அங்கு தோன்றிய ஊருக்குத் திருவண்ணாமலை என்றும் பெயர் ஏற்பட்டது.

- ஆ. குருசாமி, அத்திமூர்.

இந்நகரம் முதலில் சோழர்கள் ஆட்சியில் இருந்தது. ஹொய்சாள மன்னர்கள் திருவண்ணா மலையை தலைநகராக்கிக் கொண்டு சில காலம் ஆண்டு வந்தனர். பிறகு விஜயநகர அரசர்கள்

ஆட்சிக்கு இந்நகரம் உட்பட்டது. பின்னர் தஞ்சை நாயக்கர்கள் இதனை ஆட்சி செய்தனர்.

திருவண்ணாமலை பஞ்சபூதத்தலங்களுள் அக்கினிதலம் (நெருப்பு) மற்ற தலங்கள்: ஆகாயம் சிதம்பரம். நீர் - திருவானைக்கா, காற்று திருக்காளத்தி, நிலம் - காஞ்சி, ஆரூர்.

திருவாரூரில் பிறக்க முக்தி, காசியில் இறக்க முக்தி; சிதம்பரத்தைக் காண முக்தி; ஆனால் நினைத்தவுடன் முக்தி தரும் தலம் திருவண்ணாமலை.

திருவண்ணாமலை முக்திபுரி, சிவலோகம், அருணாசலம், திருவருணை, சோணாச்சலம், சோணாத்கிரி, அனல்கிரி என்று அழைக்கப் படுகிறது.

கயிலையில் சிவபெருமானுடைய நெற்றிக் கண்ணை உமாதேவியார் விளையாட்டாக மூடினார். உலகமே இருண்டு விட்டது. பரமன் சினந்து அவளைச் சபித்தார். உமாதேவி நெடுங் காலம் திருவண்ணாமலையில் சிவனை நோக்கித் தவம் செய்தாள். பின்னர் கார்த்திகைத் திருவிழா வன்று இறைவி, இறைவனை வணங்கி நின்றாள். அப்பொழுது அவள் முன் ஒரு சோதி உண்டாகி அதில் சிவபெருமான் தோன்றினார் என்பர். உமாதேவியை மலைவலம் வரும்படி கூறினார். அங்கு காளையின் மீது தேவிக்குக் காட்சி தந்தார் என்பர்.

தாருகாசுரனைக் கொன்றபிறகு முருகப் பெருமான் திருவண்ணாமலை வந்து சிவனை வணங்கினார். அந்த நாள்தான் கார்த்திகை மாதக் கிருத்திகை ஆகும்.

இங்குள்ள ஆலயம் தென்னிந்தியாவிலேயே மிகப்பெரியது. 24 ஏக்கர் பரப்பளவு உள்ளது. மதில்சுவர்கள் 700 அடி நீளமும் 1500அடி அகலமும் கொண்டது. கோயிலுக்கு ஐந்து பிரகாரங்கள் உண்டு. நான்கு வாயில்கள் இருக்கின்றன. ஒவ்வொரு வாயிலுக்கும் ஒவ்வொரு கோபுரம் உண்டு.

இக்கோயிலில் இறைவன் அண்ணாமலையார். இறைவி உண்ணாமுலை அம்மாள்.

15-ஆம் நூற்றாண்டில் பிறந்த அருணகிரிநாதர் இங்கு தான் வாழ்ந்தார். திருப்புகழ், கந்தரனுபூதி. கந்தரலங்காரம் தந்தார். இரமணமகரிஷியும். சேஷாத்திரி சுவாமியும் யோகிராம் சூரத்குமாரும் இங்கு வாழ்ந்து மக்களுக்கு அருள் தந்தனர். குகை நமச்சிவாயர் இங்கு வாழ்ந்து சித்திபெற்றார்.

திருவண்ணாமலையில் இசுலாமியர்களின் வழிபாட்டு இடம் பெரிய மசூதி உள்ளது. கி.பி.1914ல் திருவண்ணாமலையில் திரு. டேனியல் என்பவரால் கட்டப்பட்ட கார்மேல் என்ற கிருத்துவ ஆலயம் உள்ளது. இங்கு சமணர்களின் வழிபாட்டுத் தலம் (இடம்) உள்ளது. தேசிய ஒருமைப்பாட்டுக்கு திருவண்ணாமலை ஒரு எடுத்துக்காட்டாகும்.

கி.பி. 17-ஆம் நூற்றாண்டில் இப்பகுதியில் ஆங்கிலேயருக்கும், பிரெஞ்சுக்காரர்களுக்கும் போர் நடந்தது. அப்போது ஆங்கிலேயர்கள் அருணாச்சலேசுவரர் கோயிலை ஆயுதக் கிடங்காகவும். படைவீர்கள் தங்குமிடமாகவும் பயன்படுத்தினர்.

அப்பரும், சம்பந்தரும், அருணாசலேசுவரர் கோயிலில் வழிபாடு செய்திருக்கிறார்கள். வடலூர் இராமலிங்க சுவாமிகள் தாம் இயற்றிய விண்ணப்பக் கலிவெண்பாவில் அண்ணாமலையாரின் புகழையும், பெருமையையும் பாடியுள்ளார். திருவிரிஞ்சி புரத்தில் பிறந்த அப்பைய்ய தீட்சதர் திருவண்ணா மலையில் தங்கி வழிபாடு செய்துள்ளார். இடைக்காடர் என்ற சித்தரின் ஜீவசமாதி இங்குள்ளது.

இங்கிருந்து பல ஊர்களுக்கும். நகரங்களுக்கும் வெளி மாநிலங்களுக்கும் பேருந்துகள் செல்கின்றன.

அரசுப்பள்ளி, தனியார்பள்ளிகள் பல உள்ளன. அரசு கல்லூரியும், பல தனியார் கல்லூரிகளும் இங்கு உள்ளன.

ஆகஸ்டு மாதம் அருணகிரிநாதர் விழாவும், சனவரி மாதம் திருவள்ளுவர் விழாவும் சிறப்பாக நடைபெறுகின்றன. சன்மார்க்க சங்கத்தின் மூலம் விழா நடைபெறுகிறது. மேலும் பல இலக்கிய கழகங்கள் இங்கு உள்ளன. சைவத்தையும், தமிழை

யும் வளர்ப்பதில் திருவண்ணாமலை முன் நிற்கின்றது.

- வாழியூர் வே. இராசவேலன்

*** தென்பள்ளிப்பட்டு :**

போளூர் - திருவண்ணாமலை சாலையில் கலசபாக்கம் ஆற்றுப் பாலத்தைக் கடந்து செல்ல வேண்டும். அதாவது சேயாற்றின் அடுத்த கரையி லிருந்து மேற்கே சென்றால் இவ்வூரை அடையலாம்.

பாலாற்றின் தென்கரையில் உள்ள திருப்பாற் கடல் என்ற இடத்தில் திருமால் பள்ளி கொண்டுள் ளார். அத்திருமால் சேயாற்றின் தென்கரையில் எழுந்தருளி ஸ்ரீ காமாட்சி அம்மைக்கு வழிகாட்டி இங்கே ஸ்ரீ பெருமாள் பள்ளி கொண்டார். ஆகவே தான் இத்தலம் தென்பள்ளிப்பட்டு என அழைக்கப் படுகிறது.

முகமதியர்களின் ஆட்சிக் காலத்தில், முகலாய தளபதி மாலிக்காபூரின் தென்னிந்திய படையெடுப் பினால் ஸ்ரீ பள்ளி கொண்ட பெருமாளின் இத்தலம் சிதைவுற்றது. மறுபடியும் சரி செய்யப்பட்டுள்ளது.

இங்கு ஸ்ரீ மத் ஞான தேசிகர் சுவாமிகள் சமாதி உள்ளது. அதனையொட்டி மடமும் இருக்கின்றது.

- வாழியூர் வளவன்.

**தென் மகாதேவ மங்கலம் :**

இவ்வூர் போளூர் வட்டம், கலசபாக்கம் ஒன்றியத்தில் உள்ளது. போளூரிலிருந்து செங்கம் போகும் வழியில் மகாதேவ மங்கலம் என்னும் இவ்வூர் இருக்கின்றது.

இதன் பழம்பெரும் பெயர் மகாதேவி மங்கலம் என்பதாகும். தேவியின் பெயரால் பேர் பெற்ற ஊர் இது. மகாதேவி மங்கலம் என்பது மருவி மகாதேவ மங்கலம் என ஆயிற்று. இவ்வூர் தெற்கே இருப்பதால் தென் மகாதேவமங்கலம் என்றும், போளூருக்கு வடக்கே இருக்கும் ஊர் வடமகாதேவமங்கலம் என்றும் அழைக்கப்படுகிறது.

- சரவேல், வாழியூர்

அருணகிரி மங்கலம், கடைத்தெரு மாதி மங்கலம், கோயில் மாதிமங்கலம் என இப்பொழுது வழங்கும் இம்மூன்று ஊரும் ஒரு காலத்தில் மகாதேவமங்கலம் என்ற பெயரில் இருந்ததாம்.

கடைத்தெரு மாதி மங்கலத்திலிருந்து கடலாடிக்கு திரும்பும் மூலைச் சாலையிலிருந்து தெற்கே சிறிது தூரத்தில் கோயில் மாதி மங்கலம் உள்ளது. அவ்வூருக்குத் தெற்கே சேயாறு (செய்யாறு) ஓடுகிறது. இங்குள்ள கோயில் செய்யாற்றின் கரையில் உள்ள ஏழுகரை கண்டீஸ் வரத் தலங்களுள் (சப்தகரைகண்டீஸ்வரர்)

ஒன்றாகும். இது பிரகந்தநாயகி உடனுறை மல்லிகார்சுனர் சிவன் கோயிலாகும்.

விஜயநகர மன்னர் புக்கண்ணாவின் கல்வெட்டு ஒன்று தென்மகாதேவமங்கலத்தை ‘தொண்டை மண்டலத்து பல்குன்றக் கோட்டத்து உட்பிரிவாகிய பிங்கல நாட்டில் உள்ள மகாதேவ மங்கலம் என்று குறிப்பிடுகின்றது.

இக்கோயிலின் முன்னே நந்தி சிற்பம் ஒன்று உள்ளது. அந்நந்தி நல்ல சிற்பக் கலையோடு செதுக்கப்பட்டுள்ளது. இந்நந்தியின் கொம்புகளின் இடையில் பார்த்தால் மூலவர் ஸ்ரீ கரை கண்டேசுவரர் தெரிகிறார். அதுமட்டுமல்ல!

இக்கொம்புகளுக்கு இடையில் பார்த்தால் தென் கைலாயம் என அழைக்கப்படும் பருவதமலையின் உச்சியில் உள்ள அருள்மிகு பிரமராம்பிகை உடனாய ஸ்ரீமல்லிகார்ச்சுன சுவாமி கோயில் தெரியும் ஒரே நேரத்தில் இரண்டு தரிசனம்!

சோழ மன்னர்களாலும், விசயநகர மன்னர்களாலும், சம்புவராய அரசர்களாலும் சம்புவராய அரசர்களாலும் இக்கோயில் பல திருப்பணிகளைக் கொண்டுள்ளது இக்கோயிலின் வடக்கே மிருகண்ட நதி ஓடுகிறது. இங்குள்ள இறைவனை மகரிஷி விசுவாமித்திரர் பூஜித்ததாகக் கூறுவர்.

தென்மகாதேவ மங்கலத்தில் தீர்ப்பாயக்குழு ஒன்று இருந்ததாம். அருகிலுள்ள கிராமங்களில்

ஏற்படும் பிரச்சினைகளுக்கு இக்குழு சரியான தீர்ப்பு வழங்கியதாம்.

- மு. சுப்பிரமணி, தென்மாதி மங்கலம்.

*** துக்காப்பேட்டை :**

இது செங்கம்நகரின் ஒரு பகுதியாக விளங்கு கிறது. செங்கத்திற்கு வடக்கே சேயாறு ஓடுகிறது. சேயாற்றின் வடகரையில் அமைந்துள் ளது இவ்வூர்.

மன்னராட்சி காலத்திலும், ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்திலும் ஆட்சியாளர்கள் தங்கள் பகைவர்களுக்கு மரண தண்டணை (தூக்கு தண்டனை) வழங்கினர். அந்த தண்டனையை நிறைவேற்றிய பகுதி இது என்கின்றனர். இதன் காரணமாக தூக்குப்பேட்டை என்று அழைக்கப் பட்ட இப்பகுதி நாளடைவில் துக்காப்பேட்டை என மாறியிருக்கலாம்.

- சொ. சேகர், திருவண்ணாமலை.

*** தும்பைக்காடு :**

இவ்வூர் போளூர் வட்டம், ஜவ்வாது மலை ஒன்றியத்தில் உள்ளது.

இங்கு தும்பைச் செடிகள் காடுபோல் மண்டிக் கிடந்ததால் தும்பைக்காடு எனப் பெயர் வந்தது.

- ஆ. குருசாமி, அத்திமூர்.

*** துரிஞ்சாபுரம் :**

இவ்வூர் துரிஞ்சாபுரம் ஒன்றியத்தில் உள்ளது. திருவண்ணாமலை போளூர் சாலையில் உள்ள மல்லவாடியில் இருந்து கிழக்கே சுமார் 2 கி.மீ. தொலைவில் உள்ளது.

இங்கே துரிஞ்சல் என்ற ஆறு ஓடுகிறது. அவ்வாற்றின் கரையில் இவ்வூர் அமைந்துள்ளது. ஆகவே துரிஞ்சாபுரம் எனப் பெயர் வந்தது.

- வி. சதாசிவம், துரிஞ்சாபுரம்.

*** நட்சத்திரக்கோயில் :**

போளூரிலிருந்து செங்கம் செல்லும் சாலையில் 12 கி.மீ. தொலைவில் இக்கோயில் உள்ளது. மலையடிவாரத்தில் ஊர் உள்ளது. இது எலத்தூர் எல்லைக்கு உட்பட்டது. வில்வராணிக்கு அருகாமையில் உள்ளது.

இதனுடைய பழம் பெயர் உடுமலை. இங்கு முருகன் கோயில் உள்ளது. இதனை சோழ மன்னர்கள் கட்டினர்.

நட்சத்திர வடிவில் அமைந்துள்ள குன்றின் மீது இக்கோயிலை அவர்கள் இராஜகோபுரத்துடன் அமைத்தனர்.

முருகப்பெருமான் இருக்கும் இக்குன்றில் இறைவனை தரிசிக்க ஒவ்வொரு மாதமும் கிருத்திகை அன்று கார்த்திகைப் பெண்கள் நட்சத்திர தேவதை கள், இத்திருத்தலம் வந்து வழிபட்டு செல்வதால் நட்சத்திரக் கோவில் எனப்பெயர் வந்ததாகக் கூறுவர்.

சோழமன்னர்களால் 12-ஆம் நூற்றாண்டில் கிருத்திகை நட்சத்திரத்தில் சுயம்பு மூர்த்திக்கு திருத்தலம் பிரதிஷ்டை செய்யப்பட்டதால் இக் கோயில் கிருத்திகை கோயில் எனவும் அழைக்கப் படுகிறது.

- இரா. அன்பரசு, போளூர்.

- வாழியூர் வளவன்

*** நார்த்தாம்பூண்டி :**

இவ்வூர் திருவண்ணாமலை வட்டம், துரிஞ்சா புரம் ஊராட்சியைச் சேர்ந்தது. போளூரிலிருந்து திருவண்ணாமலை செல்லும் நெடுஞ்சாலையில் நாயுடுமங்கலம் புகைவண்டி நிலையத்தின் கூட்டுச்சாலையில் இருந்து மேற்கே சுமார் 5கி.மீ. தூரத்தில் உள்ளது.

இங்கு பெரிய நாயகி உடனாய கைலாசநாதர் கோயில் உள்ளது. திருவண்ணாமலை அண்ணா மலையார் கோயிலுக்கு அடுத்து மிகவும் பழமை

வாய்ந்த கோயில் இது. கல்வெட்டுகள் நிறைந்த கோயில் இது.

இத்தலத்திலுள்ள சிவனை நாரதர் வழி பட்டார். இத்தலத்தில் நாரதர் தவம் இருந்ததைக் கந்தபுராணம் கூறுகிறது.

தட்சன் என்பவனுக்கு ஆயிரம் பிள்ளைகள். தட்சன் தாட்சாயினியின் தந்தை. சிவபெருமானின் மாமனார். சிவனுக்கும் இவனுக்கும் பகை.

தன் மக்கள் ஆயிரம் பேரையும் அழைத்து சிவனை நோக்கி தவம் செய்து உயிர்களைப் படைக் கும் வரத்தைப் பெற்று வருக என அனுப்பினான். அவர்களும் தந்தையிடம் விடைபெற்று மானசவாவி என்ற இடத்தை அடைந்து அவ்வாவியில் மூழ்கி சிவனை நோக்கித் தவம் செய்ய ஆரம்பித்தனர்.

நாரதர் அங்கு வந்தார் தவம் செய்பவர்களைப் பார்த்து காரணம் கேட்டறிந்தார். சிவபெருமானை நோக்கி மும்மலங்களும் அழிய வரம்கேட்டு முக்தி அடையுங்கள் என்றார். அவர்களும் அவ்வாறே செய்தனர்.

இதனை அறிந்த தட்சன் மீண்டும் ஆயிரம் புதல்வர்களை உண்டாக்கி தவம் செய்ய அனுப்பி னார். நாரதர் அவர்களுக்கும் உபதேசம் செய்தார். அவர்களும் முக்தி அடைந்தனர்.

இதனைக் கேட்ட தட்சன் நாரதர் மீது கோபம் கொண்டான். சிவபெருமானிடத்து வரம்பெற்று வரச் சென்ற மக்களை நாரதன் எனக்கு இல்லாமல் செய்து விட்டான். 'இனி அவன் நாள்தோறும் சுற்றித் திரியக் கடவன்' என சாபமிட்டான். நாரதர் திரிந்து கொண்டே இருந்ததால் அவருடைய உடல்நிலை கெட்டது.

அவர் நார்த்தாம் பூண்டிக்கு வந்தார். அங்கு பூஞ்சோலை அமைத்துத் தினமும் செய்யாற்றில் நீராடி இலந்தை மரத்தின் கீழ் எழுந்தருளி யிருக்கும் கைலாயநாதரை வணங்கி அவர் நாமத்தைக் கூறிக் கொண்டு பன்னிரெண்டு ஆண்டு கள் தவமிருந்தார். மனம் மகிழ்ந்த சிவபெருமான் அவருக்குக் காட்சி தந்தார். அவருடைய சாபத்தை யும் நீக்கியருளினார் நாரதருடைய பெயரால் இவ்வூர்.நாரதப் பூண்டியாக இருந்து பின்னர் நார்த்தாம்பூண்டி என வழங்கலாயிற்று.

இங்குள்ள இந்த ஆலயத்திற்கு இராஜ கோபுரம் இல்லை. 30 அடி உயரமுள்ள மிகப் பெரிய நுழைவு வாயில் மண்டபம் மட்டும் உள்ளது.

இங்குள்ள இறைவனை வணங்கினால் நினைத்த காரியம் கைகூடும், பதவி உயர்வு வரும். நோய்களின்றி உலகில் நீண்ட நாள் வாழ்வார்கள்.

- வாழியூர் வே. இராசவேலன்.

*** நீப்பத்துறை :**

இவ்வூர் செங்கம் வட்டம், செங்கம் ஒன்றியத்தில் உள்ளது. செங்கத்திலிருந்து சுமார் 16 கி.மீ. தொலைவில் உள்ளது.

இவ்வூர் தென்பெண்ணை ஆற்றங்கரையில் உள்ளது. ஆற்றில் அடிக்கடி வெள்ளம் பெருகி வரும். திருவாடுதுறை, திருப்பூண்டித்துறை, திருப்பெருந்துறை என்பது போல் இவ்வூருக்கும் துறை என்ற பெயர் அமைந்துள்ளது. நீர் பெருகி வருவதால் இவ்வூர் நீர்ப்பெருகும் துறை என வழங்கி, பின் நீர்ப்பெருந்துறையாகி அப்பெயரும் சுருங்கி நீப்பத்துறை என வழங்கப்படுகிறது.

- வெ. கிருஷ்ணமூர்த்தி, மேல்பள்ளிப்பட்டு.

*** பக்கிரிபாளையம் :**

இவ்வூர் செங்கம் ஒன்றியத்தைச் சேர்ந்தது. செங்கம் பெங்களூர் நெடுஞ்சாலையில் செங்கத்திலிருந்து சுமார் 4 கி.மீ. தூரத்தில் இவ்வூர் உள்ளது.

இங்கு பெரும்பாலும் முஸ்லீம்கள் வாழ்கின்றனர். முஸ்லீம்களில் இராவுத்தர், மரக்காயர், லப்பை, பட்டானியர், பக்கிரி எனப் பல பிரிவுகள் (மேலும் பிரிவுகள்) உள்ளன. அவற்றுள் இவ்வூரில் வாழ்பவர்கள் பக்கிரி பிரிவினர். இவர்கள் இங்கு வாழ்வதால் இவ்வூருக்குப் பக்கிரிப்பாளையம் என பெயர் வந்தது.

- வெ. கிருஷ்ணமூர்த்தி, மேல்பள்ளிப்பட்டு.

*** படைவீடு :**

போளூர் வட்டம், போளூர் ஒன்றியத்தில் உள்ளது இவ்வூர். ஆரணிக்கு மேற்கே 16 கி.மீ. தொலை விலும், வேலூரிலிருந்து வடக்கே சுமார் 25 கி.மீ. தொலைவிலும் அமைந்துள்ளது. வேலூரி லிருந்து இவ்வூருக்கு வருவதற்கு சிவபெருமானின் திரிசூலம் போல் மூன்று வழிகள் உள்ளன. ஒன்று காள சமுத்திரம் வழி, இரண்டாவது வாழியூர் வழி, மூன்றாவது சந்தவாசல் வழி. அதே போல் ஆரணியிலிருந்து இவ்வூர் வருவதற்கு நான்கு வழிகள் உள்ளன.

ஆரணி நடுகுப்பம் சந்தவாசல், படைவீடு ஒரு வழி, ஆரணி களம்பூர் சந்தவாசல், படைவீடு மற்றொரு வழி, ஆரணி கஸ்தம்பாடி, கேளூர் சந்தைமேடு, சந்தவாசல், படைவீடு மூன்றாவது வழி, ஆரணி, ஒண்ணுபுரம், வாழியூர், படைவீடு, நான்காவது வழி. இவற்றுள் எவ்வழியாகவும் இவ்வூர் வரலாம். போளூரிலிருந்து கேளூர் சந்தை மேடு, சந்தவாசல் வழியாக படைவீடு வரலாம்

இது சம்புவராயர்களின் தலைநகரமாகும். சம்புவராயர்கள் இங்கேதான் கோட்டைகட்டி அரசாண்டனர். இன்றுகூட அக்கோட்டையின் மிச்சம் மீதியைக் காணலாம். இங்கு அவர்களுடைய படை தங்கியிருந்தது. ஆகவே படைவீடு எனப்பட்டது. படைவீடு என அழைக்கப்பட்ட இவ்வூர் பின்னர் படவேடு என ஆகி விட்டது.

இவ்விடத்தைத் தேர்வு செய்து இராசகம்பீர சம்புவராயர் என்பவர் தலைநகரையும், கோட்டையையும் உருவாக்கினார். இவர் கோட்டையைக் கட்டுவதற்கு சுற்றிலும் மலைகள் இருந்தது மிகவும் வசதியாக ஆயிற்று. இச்சம்புவராயர் இதனை மருதரைசர் படைவீடு என அழைத்து பெயரிட்டார். இவ்வூர் இப்பொழுது அம்மன் கோயில் படவேடு என அழைக்கப்படுகிறது.

இக்கோட்டையின் மதில்சுவர்கள் மண்ணால் கட்டப்பட்டது. அந்நாளில் இவ்வூர் (நகரம்) 26 கி.மீ சுற்றளவு உள்ளதாக இருந்தது. கோட்டை சுவரின் உயரம் 30 அடியும், அகலம் 10 அடியும் இருந்ததாக ஆராய்ச்சியாளர் கூறுவர். மதில் சுவரைச் சுற்றிலும் அகழி இருந்தது. இதன் மேல் கிழக்கிலும், வடக்கிலும் ஆடு பாலங்கள் இருந்தன. கோட்டைக் குள் அம்மையப்ப ஈசுவரன் என்று அழைக்கப்படும் சிவன் கோயிலை இராசகம்பீரச்சம்புவராயர் கட்டினார்.

இக்கோட்டை மதிலின் அருகே கிழக்குப் பக்கம் இராமர் கோயில் உள்ளது. அதனை இப்பொழுது யோக இராமர் என அழைக்கின்றனர். மேற்குப்புறம் உள்ள மலைமீது வேணுகோபால் சுவாமி கோயில் உள்ளது. அம்மலையை இன்று கோட்டைமலை என அழைக்கின்றனர்.

இங்கு சிவன் கோயிலும், முருகர் கோயிலும் பாழடைந்த நிலையில் இருந்தன. இதனை யெல்லாம் சென்னை டி.வி.எஸ். நிறுவனத்தார் புதுப்பித்து வழிபாட்டுக்குரிய கோயில்களாக ஆக்கியுள்ளனர்.

கோட்டைமலை மீது இருக்கும் பெருமாள் கோயில் 'ருக்மணி உடனாய வேணுகோபால் சுவாமி' எனப்படுகிறார். இங்கு புரட்டாசி மாதம் சனிக்கிழமைகளில் சிறப்பு வழிபாடு நடக்கிறது. அம்மலைமீது ஏறி, சுவாமியை வணங்கும்போது நமக்கு திருப்பதியில் இருப்பதுபோன்ற உணர்வு வருகிறது.

இங்குள்ள இரேணுகாம்பாள் அம்மன் கோயிலில் ஆடிமாதம் வெள்ளிக்கிழமைகளில் சிறப்பான வழிபாடும், சுவாமி திருவீதி உலாவும் நடக்கிறது. இவ்விழாவைக் காண ஏராளமான மக்கள் தமிழ்நாட்டிலிருந்து வருகின்றனர். அரசாங்கம் தனியாக (Spare) பேருந்துகளை இயக்குகிறது.

இக்கோயிலில் இருக்கும் அம்மனை வழிபட்டால் நினைத்த காரியம் நடக்கும், நோயில்லாமல் நீடு வாழ்வர், குழந்தைப்பேறு இல்லையென்றால் அதுவும் கைகூடும். பகையுணர்ச்சி மாறும்.

இக்கோயில் அம்மனுக்கு பலர் முடி தருகின்றனர். வேப்பஞ்சேலை கட்டி அம்மனை சுற்றி வந்து

வழிபடுகின்றனர். கண் தெரியாதவர்களுக்கு பார்வை வந்தவுடன் அம்மனுக்கு கண்மலர் (வெள்ளி) காணிக்கை செலுத்துகின்றனர்.

இவ்வூருக்கு தெற்கு பக்கம் ஒரு நதி ஓடுகிறது. அது கமண்டலநதி என அழைக்கப்படுகிறது. இந்நதியும், கண்ணமங்கலம் அருகே ஓடி வரும் நாகநதியும் ஆரணிக்கு அருகில் ஒன்றாகச் சேர் கின்றன.

கமண்டலநதியின் குறுக்கே செண்பகத் தோப்பு என்ற இடத்தில் ஒரு அணை கட்டப் பட்டுள்ளது. நீரைத் தேக்கி விவசாயத்துக்குத் திறந்து விடுகின்றனர்.

- வாழியூர் இராச.பேரரசு.

*** பட்டரைக்காடு :**

இவ்வூர் போளூர் வட்டம், ஜவ்வாது மலை ஒன்றியத்தில் உள்ளது. ஜம்னா மரத்தூரிலிருந்து அத்திமூர் போகும் வழியில் சுமார் 16 கி.மீ. தொலைவில் உள்ளது.

இங்கு பழங்குடி மக்கள் மரப்பட்டையை ஆடையாக அணிந்து வந்தார்களாம். பட்டைக்காடு என்று அழைக்கப்பட்டு இப்பொழுது பட்டரைக் காடு என மருவியுள்ளது.

இப்பொழுது கூட ஒரு சிலர் மரப்பட்டை-களைக் கோர்த்து அணிந்து வருகின்றனர். இங்கு காட்டிலாகா அதிகாரிகள் தங்குவதற்கு பங்களா கட்டிவிடப்பட்டுள்ளது.

- ஆ. குருசாமி, அத்திமூர்.

*** பழங்கோயில் :**

இவ்வூர் போளூருக்கு தென்மேற்கே சுமார் 12 கி.மீ. தொலைவில் சேயாற்றின் தென்கரையில் உள்ளது. போளூரிலிருந்து செங்கம் செல்லும் சாலையில் கலசபாக்கம், பூண்டி கடந்ததும் இவ்வூர் கூட்டுச்சாலை உள்ளது. அங்கிருந்து சேயாற்றைக் கடந்தால் இவ்வூரை அடையலாம்.

ஊருக்குள் நுழையும்முன் சேயாற்றின் கரையில் அருள்மிகு பாலாம்பிகை உடனுறை பாலக்ரிதீஸ்வரர் திருக்கோயில் உள்ளது. இச்சிவலாயத்தை சோழமன்னன் மதுராந்தக உத்தமச்சோழன் கட்டியதாகக் கூறப்படுகிறது.

சந்திரகிரிராஜா தான் போரில் வெற்றி பெற வேண்டும் என்பதற்கு இத்தலத்திற்கு வந்து இறைவனை வழிபட்டார். பின்னர் போரில் வெற்றி பெற்றார் என இங்குள்ள கல்வெட்டுச் செய்தி கூறுகிறது.

இம்மன்னன் இறைவனைப் பழங்களால் அலங்கரித்து பூஜித்தார். ஆகவே பழம்கோயில் எனப்பட்டது. அப்பெயர் மருவி பழங்கோயிலாயிற்று.

பழங்கோயில் என பெயர் வந்ததற்கு புராணக் கதையும் ஒன்றுண்டு. பர்வதமலையில் திருமால் அமுதகலசம் வைத்து பூசை செய்தார். சேயாற்று வெள்ளத்தால் அவ்வமுதகலசம் அடித்துச்சென்றது. அதிலிருந்து பழம் ஒதுங்கிய இடம் பழங்கோயில் ஆயிற்று.

இங்கு இறைவனை அகத்திய முனிவர் பூஜித்தார். வடலூர் வள்ளலார் பூண்டிக்கு வந்த போதெல்லாம் இங்குள்ள இறைவனை பூசித்தார். பூண்டி மகான் ஆற்றுச் சுவாமிகள் இக்கோயிலில் தங்கி இறைஞானம் பெற்று பின்னர் பூண்டி சென்றாராம்.

- வாழியூர் வே. இராசவேலன்

- இரா. அன்பரசு, போளூர்.

*** பாடகம் :**

இவ்வூர் போளூர் வட்டம், கலசபாக்கம் ஒன்றியத்தில் உள்ளது. போளூரிலிருந்து சுமார் 12 கி.மீ. தொலைவில் உள்ளது. போளூரிலிருந்து மன்சுராபாத் போகும் வழியில் மன்சுரா பாத்திலிருந்து 2 கி.மீ தொலைவில் உள்ளது.

போளூர் மட்டப்பிறையூர் - அலியாமங்கலம் - செம்மியாமங்கலம் பாடகம்.

பாடகம் என்றால் காலில் அணியக்கூடிய அணி. இவ்வூரில் பூமிக்கு அடியிலிருந்து கால் அணி வடிவில் கற்கள்கிடைக்கின்றனவாம். ஆகவே இவ்வூருக்கு பாடகம் எனப் பெயர் வந்தது.

- இரா. வ. கமலக்கண்ணன், வந்தவாசி.

*** பாணாம்பட்டு :**

இவ்வூர் போளூர் வட்டம், கலசபாக்கம் ஒன்றியத்தில் உள்ளது. போளூரிலிருந்து சுமார் 19 கி.மீ. தொலைவில் உள்ள து.

இவ்வூரில் பாணர்கள் அதிகமாக வாழ்ந்தனர். பாணர்பட்டு என அழைக்கப்பட்டு இப்பொழுது பாணாம்பட்டு என அழைக்கப்படுகிற து.

- இரா. அன்பரசு, போளூர்.

*** பாலூர் :**

இவ்வூர் போளூர் வட்டம், கலசபாக்கம் ஒன்றியத்தில் உள்ளது. பர்வதமலையின் தென் மேற்கில் உள்ள ஒரு வளமான ஊராகும். போளூரிலிருந்து செங்கம் போகும் வழியில் சுமார் 29 கி.மீ. தொலைவில் முக்கிய சாலையில் இருந்து

வடக்கே சுமார் 2 கி.மீ. தூரம் சென்றால் இவ்வூரை அடையலாம்.

பர்வத மலையின் உச்சியில் கோயில் கொண்டிருக்கும் மல்லிகார்ச்சுனர், பிரம்மராம் பிகைக்கு அபிடேகம் செய்ய தினந்தோறும் இங்குள்ளோர் பால் கொடுத்து வந்தார்களாம். ஆகவே பாலூர் என அழைக்கப்பட்டது, அழைக்கப்படுகிறது.

இவ்வூரில் மாரியம்மன் கோயில் ஒன்று உள்ளது. அந்த அம்மனுக்கு ஆடி மாதம் 7 நாள்கள் திருவிழா நடக்கிறது. ஏழாவது நாள் பெரிய தேர்த்திருவிழா. அக்கம் பக்கத்திலுள்ளவர்கள் ஏராளமானவர்கள் வந்து இவ்விழாவில் கலந்து கொண்டு அம்மன் அருளைப் பெறுகின்றனர்.

-.ஆ. குருசாமி, அத்திமூர்.

*** பில்லூர் :**

இவ்வூர் போளூர் வட்டம், கலசபாக்கம் ஒன்றியத்தில் உள்ளது. பூண்டிக்கு அருகில் சேயாற்றங்கரையில் உள்ளது.

பர்வதமலையில் திருமால் கலசம் வைத்து சிவபெருமானை வணங்கினார். சேயாற்று வெள்ளத்தில் அக்கலசம் அடித்துச் செல்லப் பட்டது. அருகம்புல் ஒதுங்கிய இடம் புல்லூர் என

அழைக்கப்பட்டு இப்பொழுது பில்லூர் என வழங்கப்படுகிறது.

- இரா. அன்பரசு, போளூர்.

* புட்பகிரி :

இவ்வூர் போளூர் வட்டம், போளூர் ஒன்றியத்தைச் சேர்ந்தது. சந்தவாசலை இணைந்த ஓர் ஊராகும்.வேலூர் - போளூர் சாலையில் சந்தவாசல் கூட்டுச்சாலையில் (கூட்ரோட்) இறங்கி செல்ல வேண்டும்.

'புஷ்பகிரி ஜீயர்' என்ற சமயத் தலைவர் பெயரால் உண்டானது இவ்வூர். இச்செய்தியை திருக்கச்சூரிலுள்ள இரண்டாம் இராசநாராயண சம்வுராயரின் கல்வெட்டு கூறுகிறது.

- வாழியூர் வளவன்.



* பூண்டி :

போளூரிலிருந்து கலசபாக்கம் வழியாக செங்கம் செல்லும் வழியில் இவ்வூர் உள்ளது. போளூரிலிருந்து சுமார் 10 கி.மீ. தொலைவிலும், கலசபாக்கத்திலிருந்து சுமார் 1 கி.மீ. தொலைவிலும் உள்ளது.

பூண்டி செல்பவர்கள் கலசபாக்கம் வந்ததும் எழுந்து நின்றுக் கொள்ள வேண்டும். நிற்பவர்கள் வாயிற்படி அருகே வந்துவிட வேண்டும். கலசபாக்கம் கடந்ததும் நடத்துனர். 'பூண்டி போகிறவர்கள் எழுந்து வாங்க எழுந்து வாங்க' என வாய்கிழிய...(அழைப்பார்)

பிரம்மாவும், திருமாலும் தங்களில் யார் பெரியவர் என்று போட்டியிட்டனர். அவர்கள் சிவனிடம் சென்று கேட்டனர். சிவபெருமான் அவர்களுடைய ஐயம் தீர்வதற்கு தன்னுடைய அடியையும், முடியையும் கண்டு வரும்படி கூறினார்.

அதற்காக அவர் கைலாயத்திலிருந்து புறப் பட்டார். தன் முதல் பாதத்தை பர்வதமலையில் வைத்தார். அடுத்த பாதத்தை திருவண்ணாமலையில் வைத்து அக்னி பிழம்பாக நின்றார். திருமாலும், பிரம்மாவும் அடிமுடியைக் காணச் சென்று முடியாமல் திரும்பி விட்டனர்.

சிவபெருமானின் முதல் பாதம் பதிந்த இட மான பர்வதமலையில் திருமால் கலசம் வைத்து பூசனை செய்தார். செய்யாற்று வெள்ளத்தில் அக்கலசம் அடித்துச் சென்றது. ஒவ்வொரு பொருளும் ஒவ்வொரு இடத்தில் ஒதுங்கின. பூநூல் தங்கிய இடம் பூண்டி என்று அழைக்கப்பட்டது.

அகத்திய முனிவர் வழிபட்ட தலம் இது. இத்தலத்திற்கு இராமலிங்க அடிகளார் பலமுறை

வருகை தந்துள்ளார். இங்கு நீண்ட காலமாக ஆற்றுச் சுவாமிகள் ஒரு திண்ணையின் மீது அமர்ந்து அன்பருக்கு அருள் தந்தது குறிப்பிடத்தக்கது. அவருடைய சமாதியும் இங்கே உள்ளது. இங்கு ஆண்டு தோறும் குருபூஜை நட.க்கிறது. பஜனை களும், இலக்கிய சொற்பொழிவுகளும், அன்னதான மும் சிறப்பாக நடைபெறுகின்றன.

**- வாழியூர் வே. இராசவேலன்**

*** பெரியகரம் :**

இவ்வூர் போளூர் வட்டம், போளூர் ஒன்றியத்தில் உள்ளது. போளூரிலிருந்து மேற்கில் சுமார் 3 கி.மீ. தொலைவில் உள்ளது. போளூரி லிருந்து சிற்றுந்து வசதி உண்டு.

பிராமணர்கள் வாழும் இடத்திற்கு அக்ர ஹாரம் என்ற பெயர் உண்டு. இங்கு பிராமணர்கள் அதிகமாக வாழ்ந்தனர். ஆகவே பெரிய அக்ரஹாரம் எனப்பட்டது. அப்பெயர் சுருங்கி திரிந்து பெரியகரம் என்று ஆயிற்று.

**- ஆ. குருசாமி, அத்திமூர்.**

*** போளூர் :**

வேலூரிலிருந்து திருவண்ணாமலை நெடுஞ் சாலையில் உள்ளது. வேலூரிலிருந்து சுமார் 48 கி.மீ.

தொலைவிலும், திருவண்ணாமலையிலிருந்து சுமார் 35 கி.மீ. தொலைவிலும் உள்ளது. இது வேலூருக்கும் திருவண்ணாமலைக்கும் இடையில் உள்ள ஊராகும். இவ்வூரின் வழியாகப் பல இடங்களுக்குப் பேருந்துகள் செல்கின்றன. காட்பாடியிலிருந்து விழுப்புரம் செல்லும் புகைவண்டிகள் இவ்வூர் வழியாகச் செல்கின்றன.

இவ்வூரில் சுமார் 200 ஆண்டுகளுக்கு முன்னர் போளாட்சி அம்மன்கோயில் இருந்ததாம். அப் போளாட்சி அம்மன் பெயரால் போளாச்சியூர் என்று வழங்கி, பின்னர் போளூர் என்று மருவி வழங்குகிறது.

- ஆ. குருசாமி, அத்திமூர்.

இங்கு சம்பத்திரி என்ற மலை உள்ளது. சம்பத்திரி என்ற வடசொல்லுக்கு பொருளைத் தரும் மலை என்பதாகும். பொருளூர் என வழங்கி, அது மருவி போளூர் ஆயிற்று.

- இரா. வ. கமலக்கண்ணன், வந்தவாசி
- இரா. அன்பரசு, போளூர்.

அச்சுததாசர் என்ற சித்தர் ஒருவர் இங்கு பிறந்தார். சித்திகள் எல்லாம் பெற்றார். வேலூர் மாவட்டம் வல்லம் கிராமத்தில் அவருடைய சமாதி உள்ளது. வல்லத்தில் இன்றும் அவருடைய குருபூஜை நடக்கிறது.

மற்றொரு சித்தர் விட்டோபாசுவாமிகள். அவருடைய மடமும், சமாதியும் இவ்வூரில் உள்ளன.

இங்குள்ள மலை மீது பெருமாள் கோயில் உள்ளது. அங்கு சித்தர்கள் வசிப்பதாகக் கூறு கிறார்கள்.

இங்குள்ள கைலாசநாதர் ஆலயம் மிகவும் பழமையானது. போளூர் நகரில் எங்குமே ஆறு முகனுக்கு சிலை இல்லை. இங்குதான் உள்ளது. அது மட்டுமல்ல அஷ்டலட்சுமிகள் உள்ள கோயில் இது. சிவன் ஆலயத்தில் முருகர். அஷ்டலட்சுமிகள்! இங்குதான் நாகலிங்க மரம் உள்ளது. வட்டத்தில் வேறு எங்குமே இம்மலர் இல்லை.

இங்கு சம்புவராயர் என்ற ஒரு அரசர் கோட்டை கட்டி ஆண்டார். அக்கோட்டையின் எச்சம் இன்றும் இங்கு இருப்பதைக் காணலாம். அக்கோட்டை இப்பொழுது இருக்கும் பஞ்சாயத்து யூனியன் அலுவலகத்திற்கு கிழக்கே இருந்ததாம்.

போளூரின் கிழக்கே சுமார் 1 கி.மீ. தொலைவில் சேயாறு ஓடுகிறது. அதன் கரையில் வெண்மணி என்ற கிராமம் உள்ளது. அங்குள்ள வரசக்தி விநாயகர் மிகவும் சக்தி வாய்ந்ததாகக் கூறுவர்.

- **மு.கி. காந்தன்**, போளூர்.

*** மன்சுராபாத் :**

இவ்வூர் போளூரிலிருந்து கிழக்கே சுமார் 14 கி.மீ. தொலைவில் உள்ளது. போளூரிலிருந்து

பேருந்து வசதி உண்டு. போளூரிலிருந்து தேவிகா புரம் சென்று அங்கிருந்து இவ்வூரை அடையலாம். இவ்வூர் போளூர் வட்டம், சேத்துப்பட்டு ஒன்றியத்தில் உள்ளது.

மன்சூர் என்ற மகமதியரின் நினைவாக ஏற்படுத்தப்பட்ட ஊர் ஆகவே மன்சுராபாத் என அழைக்கப்படுகிறது.

**- வாழியூர் வே. இராசவேலன்.**



*** மண்டகொளத்தூர் :**

போளூரிலிருந்து சென்னைக்கு சேத்துப்பட்டு வழியாகச் செல்லும் நெடுஞ்சாலையில் போளூருக்கு 11 கி.மீ. கிழக்கில் மண்ட கொளத்தூர் கூட்டுச்சாலை (கூட்ரோட்) உள்ளது. அங்கிருந்து வடக்கே 3 கி.மீ. நடந்தால் இவ்வூரை அடையலாம். இது செய்யாற்றின் தென்கரையில் உள்ளது. போளூர் வட்டம், சேத்துப்பட்டு ஒன்றியத்தைச் சேர்ந்தது.

தொண்டை மண்டலத்தின் செயங்கொண்ட சோழமண்டலத்து பல்குன்ற கோட்டத்தைச் சேர்ந்தது இவ்வூர். மேல்குன்றநாட்டு பிரிவின் தலைமை இடமாக இவ்வூர் விளங்கியது.

எண்சாண் உடம்பிற்கு தலையே பிரதானம். அதுபோல பல்குன்ற கோட்டத்துமேல் குன்ற நாட்டிற்கு இவ்வூர் தலைமையிடமாக விளங்கிய தால் மண்டை கொளத்தூர் என அழைக்கப்பட்டு மண்ட குளத்தூர் என மருவியது.

இவ்வூருக்கு இப்பெயர் வந்தமைக்கு புராணக் கதை ஒன்று சொல்லப்படுகிறது.

இவ்வூரில் பிராமணர்கள் அதிகமாக வசித்த னர். பாண்டவர்கள் வனவாசம் வருகையில் இவ்வூரில் சில காலம் தங்கினர்.

இவ்வூரின் கிழக்கில் வேதகிரி மலை உள்ளது. அம்மலையில் பகாசுரன் என்ற அரக்கன் வாழ்ந்து வந்தான். அவனுடைய தொல்லை அதிகமாக இருந்தது.

அவ்வசுரனை அடக்க பீமன் சென்றான். பகாசுரனுக்கும் பீமனுக்கும் பலமான சண்டை நடந்தது. பீமன் தன் கதாயுதத்தால் பகாசுரனின் தலையில் அடித்தான். அத்தலை அறுந்து இவ்விடத்தில் விழுந்தது. பீமன் வேகமாகச் சென்று அத்தலையைத் தன் கையால் பூமியில் அழுத்தி துடித்துக்கொண்டிருந்த அத்தலையின் உயிரைப் போக்கினான். அங்கே குளம் போல பள்ளம் ஏற்பட்டது. அதன் உள் அமைப்பு மண்டை ஓடு வடிவில் அமைந்திருப்பதனால் அதற்கு கபால

தடாகம் என்றும், அவ்வூருக்கு கபாலதடாகபுரம் என்றும் பெயர் ஏற்பட்டது.

பின்னர் அவ்வூர் மண்டை கொளத்தூர் என அழைக்கப்பட்டு பின்னர் மண்ட கொளத்தூர் என மருவியது என்பர்.

இவ்வூருக்கு அப்பெயர் வந்த காரணம் வேறு ஒன்றையும் சொல்கின்றனர். அவ்வூர் அன்பர் ஒருவரை விசாரித்தபோது இக்கருத்தைச் சொன் னார். அவ்வூரை ஆட்சி செய்த மன்னன் ஒருவன் வேற்று நாட்டின் மீது சண்டையிட்டு பகைவர் களின் தலைகளைக் கொய்து வந்து இங்கு இக்குளத்தில் கொட்டினான். குளம் முழுவதும் மண்டைகளாக இருந்ததால் மண்டை குளம் என்றும் அவ்வூருக்கு மண்டைகொளத்தூர் என்றும்பெயர் உண்டாயிற்றாம்.

சுதந்திர இந்தியாவின் உச்சநீதிமன்றத்தின் முதல் பிரதம நீதிபதியாயிருந்தவர் ஜஸ்டிஸ் பதஞ்சலி சாஸ்திரியார். அவர் பிறந்த ஊர் இது. உத்திரமீமாம்ச மேதை மகாமகோபாத்தியாய ஸ்ரீ சின்னசாமி சாஸ்திரிகள் இவ்வூரைச் சேர்ந்தவர். இப்படி பல பெருமைகளை உடையது இவ்வூர்.

**- வாழியூர் வளவன்.**

*** மருத்துவாம்பாடி :**

இவ்வூர் போளூர் வட்டம், சேத்துப்பட்டு ஒன்றியத்தில் உள்ளது. சேத்துப்பட்டுக்கு வட மேற்கில் சுமார் 5 கி.மீ. தொலைவில் இவ்வூர் உள்ளது.

இங்கு ஒரு காலத்தில் ஓரினத்தவர் மருத்துவம் செய்து வந்தனர். அவர்களுக்காக விடப்பட்ட ஊர் இது. ஆகவே மருத்துவாம்பாடி என அழைக்கப் படுகிறது.

- **இரா. வ. கமலக்கண்ணன்,** வந்தவாசி.

*** மல்லாபாடி :**

இவ்வூர் செங்கம் வட்டத்தைச் சேர்ந்தது. இங்கு மல்லர்கள் (மற்போர் செய்பவர்கள்) வாழ்ந்த தால் மல்லர்பாடி என அழைக்கப்பட்டு இப்பொழுது மல்லாபாடி என அழைக்கப்படுகிறது.

- **சரவேல்,** வாழியூர்.

*** மாம்பாக்கம் :**

இவ்வூர் போளூர் வட்டம், கலசபாக்கம் ஒன்றியத்தில் உள்ளது. போளூரிலிருந்து செங்கம் செல்லும் நெடுஞ்சாலையில் போளூலிருந்து 19 கி.மீ. தொலைவில் உள்ளது. கடலாடியை அடுத்து கிழக்கே இவ்வூர் உள்ளது.

பர்வத மலையில் கலசம் வைத்து திருமால் வணங்கினார். சேயாற்று வெள்ளத்தில் அக்கலசம் அடித்துச் செல்லப்பட்டது. அதிலிருந்த மாவிலை (மாங்கொத்து) ஒதுங்கிய இடம் மாம்பாக்கம் என அழைக்கப்படுகிறது.

வேகமாக ஓடிவரும் சேயாறு இங்குள்ள கரை கண்டேசுவரர் கோயிலுக்கு அருகில் வேகம் தடைபட்டு நேர் கிழக்காக திரும்பி சுமார் 10 கி.மீ. தொலைவு அதாவது கலசபாக்கம் வரைவேகம் குறைந்து ஓடுகிறது.

இங்குள்ள கோயில் 10 ஆம் நூற்றாண்டில் கட்டப்பட்டது.

- இரா. அன்பரசு, போளூர்.

- சரவேல், வாழியூர்.



* முடையூர் :

இவ்வூர் போளூர் வட்டம், சேத்துப்பட்டு ஒன்றியத்தில் உள்ளது. போளூர் - சேத்துப்பட்டு சாலையில் போளூரிலிருந்து சுமார் 10 கி.மீ. தொலைவில் உள்ளது.

ஆதொண்ட சக்கரவர்த்தி என்னும் அரசன் இவ்வூர் வழியாகச் சென்றான். இவ்விடம் வந்ததும்

அவனுடைய பயணம் தடைப்பட்டு முடங்கியது. ஆகவே முடையூர் எனப்பட்டது.

முடங்கிய பயணம் மீண்டும் தொடர்ந்தது. மன்னன் மகிழ்ந்தான். முடையூரில் அமிர்தலிங்கேசுவரருக்குக் கோயில் எடுத்துச் சிறப்பித்தான்.

இம்மன்னன் அருகில் உள்ள கனககிரி மலையில் கைலாசநாதருக்கும், பொன்மலை நாதருக்கும் திருக்கோயில் எடுத்துச் சிறப்பித்தான்.

இவ்வூர் கல் சிற்பக் கலைக்குச் சிறப்பு பெற்றது. 'சிற்பத்தினால் சிறப்படை முடையூர்' என இவ்வூர் பாராட்டப்படுகிறது.

சாந்த மொடையூர்சீ சன்மார்க்க சங்கமுயர்
சேந்தன் முருகன் திருவருளால் - வாய்ந்த
வளாமலாம் எய்தியே மாண்புடனே வேதம்
உளவரைக்கும் வாழி உயர்ந்து

என திருமுருக கிருபானாந்த வாரியார் சுவாமிகளால் புகழப்பட்டது இவ்வூர்.

- அ. அமிர்தலிங்கம், முடையூர்.

*** மேல்பள்ளிப்பட்டு :**

இவ்வூர் செங்கம் வட்டம், செங்கம் ஒன்றியத்தைச் சேர்ந்தது. செங்கத்திலிருந்து சுமார் 8 கி.மீ. தென்மேற்கே உள்ளது. செங்கத்திலிருந்து பேருந்துகள் பல செல்கின்றன.

இவ்வூரில் நீண்ட காலத்துக்கு முன்பு பாளையக்காரர்கள் வாழ்ந்தார்கள். இவர்கள் இரும்பை உருக்கி ஆயுதங்கள் தயாரித்தார்கள். இதற்கு அடையாளமாக பெரிய குன்றுகள் போல இரும்பு சிட்டங்கள் உள்ளன. துப்பாக்கி ஏந்திய போர்வீரர்களின் சிலைகள் நடுகற்களாக உள்ளன.

பாளையக்காரர்கள் பெயரினால் பாளையப் பட்டு என்று பெயர் ஏற்பட்டு, அது மருவி பள்ளிப்பட்டு என்று ஆனதாகச் சொல்லப்படு கிறது.

- வெ. கிருஷ்ணமூர்த்தி, மேல்பள்ளிப்பட்டு.

*** மேல்ராவந்தவாடி :**

இவ்வூர் செங்கம் நீப்பத்துறை சாலையில் மேல்பள்ளிப்பட்டிலிருந்து மேற்கே சுமார் 4 கி.மீ. தூரத்தில் உள்ளது.செங்கம் வட்டம், செங்கம் ஒன்றியத்தைச் சேர்ந்தது.

இங்கு வாழ்ந்த மக்கள் இரவு நேரங்களில் பசுக்கள் திருடு போகாமல் காவல் காத்து வந்தனர். ஆகவே இவ்வூர் இராமந்தைபாடி (இரா - இரவு; மந்தை - ஆடுமாடுகளின் கூட்டம்; பாடி - ஊர், கவசம்) என அழைக்கப்பட்டு ராவந்தபாடி - ராவந்தவாடி என மருவியது.

அக்காலத்தில் படைகளுக்குக் கவசம்போல் இவ்வூர் மக்கள் இருந்து காத்ததால் ராவந்தபாடி என அழைக்கப்பட்டு, ராவந்தவாடி என அழைக்கின்றனர் என்பர்.

**- வாழியூர் - வே. இராசவேலன்.**



*** மேல் வணக்கம்பாடி :**

இவ்வூர் செங்கம் வட்டம், செங்கம் ஒன்றியத்தைச் சேர்ந்தது. செங்கத்திலிருந்து நீப்பத்துறை போகும் வழியில் மேல் பள்ளிப்பட்டுக் குக் கிழக்கே உள்ளது. செங்கத்திலிருந்து சுமார் 17 கி.மீ. தொலைவில் உள்ளது.

இங்கு நாணயப் பரிசோதகர்கள் வாழ்ந்திருந்தனர். ஆகவே வண்ணக்கன்பாடி என அழைக்கப் பட்டு வணக்கம்பாடி என மருவியது.

(வண்ணக்கன் - நாணயப் பரிசோதகர்)

**- வாழியூர். இராச. பேரரசு**

*** வசூர் :**

இவ்வூர் போளூர் திருவண்ணாமலை சாலையில் போளூரிலிருந்து 2 கி.மீ. தொலைவில் உள்ளது. போளூர் வட்டம்,போளூர் ஒன்றியத்தைச் சேர்ந்தது.

இவ்வூரில் வசூவூருடையார், திருவேகமுடையார் என இரண்டு கோயில்கள் இருந்ததாகக் கல்வெட்டு ஒன்று கூறுகிறது. வசூவூருடையார் கோயில் இருந்ததால் வசூர் என பெயர் ஏற்பட்டதாகக் கூறுவர். வசூர் கி.பி. 19ஆம் நூற்றாண்டில் வசுகூர் நாட்டுப் பிரிவின் தலைநகராக விளங்கியது. இதனைப் பல்குன்றக் கோட்டத்து வசுகூர் என சோழர் காலத்து கல்வெட்டு கூறுகிறது.

இங்கு 6 அடி உயரம் லிங்கம் இருந்தது. அதனுடைய பீடம் தாமரை வடிவில் இருந்தது என கூறுவர். இது பல்லவர் காலத்து லிங்கமாகும்.

- இராச. பேரரசு, வாழியூர்.

- மு.கி. காந்தன், போளூர்.



*** வடமகாதேவ மங்கலம் ***

இவ்வூர் வடமாதி மங்கலம் என அழைக்கப் படுகிறது. போளூர் வட்டம், சேத்துப்பட்டு ஒன்றியத்தில் இவ்வூர் உள்ளது. போளூரிலிருந்து ஆரணி செல்லும் சாலையில் மாதிமங்கலம் கூட்டுச் சாலையில் இருந்து இவ்வூர் சுமார் 3 கி.மீட்டரில் உள்ளது.

இதுவும் தேவியின் பெயரால் மகாதேவி மங்கலம் என வழங்கப்பட் டு மகாதேவ மங்கலம் என ஆயிற்று. இங்கு உள்ள கோயில் மகா தேவீசுவரர் என அழைக்கப்படுகிறது. இது 1359 ல் கட்டப்பட்டது. கல்வெட்டு ஒன்று இவ்வூரை இராசகம்பீரன் மகாதேவி மங்கலம் என்றும், கோயிலை மாதேவி சுரமுடைய நாயனார் என்றும் கூறுகிறது.

- சரவேல், வாழியூர்.



*** வளையாம்பட்டு :**

இவ்வூர் செங்கத்திலிருந்து மேற்கே சுமார் 2கி.மீ. தொலைவில் உள்ளது.

வளையாம்பட்டு, வளைந்த பிறைச் சந்திரனைச் சூடிய சிவபெருமான் உறையும் ஊர் என்பது இதன் பொருளாகும். இது காலப்போக்கில் வளையம் அழகியான்பட்டு என ஆகி, வளையம்பட்டு, வளையாம்பட்டு என மருவியது.

இவ்வூர் செங்கம்வட்டம், செங்கம் ஒன்றியத் தைச் சார்ந்தது.

- சரவேல், வாழியூர்..

*** வாசுதேவன் பட்டு :**

இவ்வூர் செங்கம் வட்டம் புதுப்பாளையம் ஒன்றியத்தைச் சேர்ந்தது. திருவண்ணாமலை யிலிருந்து பாச்சல் வழியாக செங்கம் பேருந்தில் சென்று அங்கிருந்து படி அக்ரகாரம் வழியாகச் செங்கம் செல்லும் பேருந்தில் சென்று இவ்வூரை அடையலாம். போளூருக்கு தென்மேற்கே சுமார் 35 கி.மீ. தொலைவில் இவ்வூர் உள் ளது.

இங்குள்ள சிவன் கோயில் சிறப்பு மிக்கது. சுவாமி பெயர் ஸ்ரீ பக்த வத்சலேஸ்வரர். அம்மை பெயர் சௌந்தரநாயகி அம்மாள். இக்கோயிலில் உள்ள கல்வெட்டு, வாசுதேவராஜா என்பவர் இவ்வூரையும் அதனைச் சார்ந்த பகுதிகளையும் ஆட்சி செய்து வந்தார் என் று சொல்கிறது.

இம்மன்னரின் பெயராலேயே இக்கிராமம் வாசுதேவன் பட்டு என அழைக்கப்படுகிறது.

இங்குள்ள சிவனை, சித்திரகுப்தன், விசித்திர குப்தன் ஆகியோர் வழிபட்டனர். இங்குள்ள இறைவனை வணங்கினால், குறுகிய மனப்பான்மை, சூது, வஞ்சகம், பழிவாங்கும் மனப்பான்மை ஆகியவை ஒழியும்.

**- சரவேல், வாழியூர்.**



*** வாழியூர் :**

இவ்வூர் போளூர் வட்டம் போளூர் ஒன்றியத்தைச் சேர்ந்தது. வேலூர் - போளூர் சாலையில் வேலூரிலிருந்த 26 கி.மீ. தூரததில் சாலைக்கு மேற்கே சுமார் 3 கி.மீ. தொலைவிலும், போளூரிலிருந்து 26 கி.மீ. தூரத்தில் சாலையிலிருந்து சுமார் 3 கி.மீ. தொலைவிலும் உள்ளது. ஆரணியிலிருந்து 16 கி.மீ. தொலைவில் ஆரணிக்கு மேற்கே இவ்வூர் உள்ளது. செய்யாரிலிருந்து ஆரணி குண்ணத்தூர், மேல்நகர் வழியாக பேருந்து உண்டு. வேலூரிலிருந்து கணியம்பாடி கண்ணமங்கலம் வழியாக இவ்வூருக்கு பேருந்து வசதி உண் டு.

போளூரிலிருந்து வாழியூர் வருவதாயின் போளூரிலிருந்து வாழியூர் கூட்டுச்சாலையில் இறங்கி அங்கிருந்து வேறு பேருந்தைப் பிடி.த்து வாழியூர் வரவேண்டும். அவ்வாறு வருவது மிகவும் கடினமான செயல். காரணம்! போளூரில் ஏறும் போது நடந்துனர் (ஒரு சிலர்) வாழியூ ர் கூட்ரோட். நிற்காது (அவ்வூர் அருகில் சென்றதும் மேலே பறந்து செல்லும்) என்பர்.

வாழியூருக்கு தெற்கே ஒரு பெரிய மலை உள்ளது. அதனை வெள்ளிமலை என்பர்.

சம்புவராயர் படைவீட்டைத் தலைநகராகக் கொண்டு அரசாண்டனர். பெரிய கோட்டையைக்

கட்டினர். கோட்டை நகருக்குள் செல்வதற்கு கிழக்கிலும், வடக்கிலும் இரண்டு புறவாயில்கள் இருந்தன.

கிழக்கு வாயில் சேனைக்கு மீண்டான் வாயில் என்றும் வடக்கு வாயில் தன்மம் தாங்கியவன் வாயில் என்றும் பெயர்.

தன்மம் தாங்கியவன் வாயிலைக் கடக்கு மிடத்தில் ஓர் ஊர் உள்ளது. அவ்வூர் வாயிலூர் எனப்பட்டது. கோட்டை வாயிலுக்குச் செல்லக் கூடிய வழியில் இருந்ததால் அவ்வூர் வழியூர் என அழைக்கப்பட்டு, வாழியூர் என மருவியது.

வாழியூருக்கு எக்லாபுரம் என்று ஒரு பெயர் ஒரு காலத்தில் வழங்கி வந்தது.

தெலுங்கர், படைவீட்டுக் கோட்டையைக் கைப்பற்ற எண்ணினர். தெலுங்கர்படை முலபாகலில் இருந்து புறப்பட்டு, விரிஞ்சிபுரம் வந்து, அரசபாட்டை வழியாகப் படைவீட்டை நோக்கி வந்தனர். பாண்டியரும், சோழரும், சேரரும் அவர்களுடன் சேர்ந்து கொண்டனர் . தாங்கள் வெற்றி பெற தங்கள் தெய்வமான எக்லாதேவியை வேண்டிக் கொண்டனர். வெற்றி பெற்றதும் தங்கள் வெற்றிக்கு அறிகுறியாக அவ்விடத்தில் எக்லாதேவி யைப் பிரதிஷ்டை செய்தனர். அத்தேவிக்கு கோயில் கட்டிய இடம் எக்லாவரம் என அழைக்கப்பட்டது.

வாழியூர் இலக்கிய அன்பர்கள் வாழும் ஊராகும். இங்கு கம்பன் கழகம், திருவள்ளுவர் கழகம், இளங்கோ மன்றம் ஆகிய கழகங்கள் தோன்றி தமிழை வளர்த்து வருகின்றன. அருகில் படிக்கும் பள்ளிகளில் தமிழில் முதல் மதிப்பெண் பெற்ற மாணவர்களுக்குப் பரிசுகள் வழங்கு கின்றனர்.

**வாழியூர் வாழியவே மாண்புகும் பன்கழகம்**
**ஏழிசைபோல் என்றும் இனிதோங்க - வாழியவே**
**அன்பரெலாம் கூடி அரியதமிழ்த் தொண்டியற்றி**
**இன்பமுடன் வாழ்க இனிது.**

என்று அருள்மொழி அரசு திருமுருக கிருபானந்த வாரியார்சுவாமிகள் இவ்வூரைப் பற்றியும். கம்பன் கழகத்தைப் பற்றியும் வாழ்த்துகிறார்.

**சீர்சான்ற வாழியூர் செம்மைசேர் சான்றோர்கள்**
**பார்சான்ற நற்றமிழின் பாங்குணர்த்த - நேர்சான்ற**
**கம்பன் கழகம் கவினுறவே தானமைத்தார்**
**இம்பருளார் போற்ற இசைந்து.**

என்று கோவில்பட்டி திருக்குறள் தசாவதானி பெ.இராமையா வாழ்த்துகிறார்.

**ஆழிசூழ் உலகொடு தோன்றிய தமிழை**
**வாழியூர் வளமார் கம்பன் கழகம்**
**வளர்ந்திட உழைத்து வருவதைக் கண்டு**
**உளத்திடை மிகவும் மகிழ்ச்சிகொள் கின்றேன்.**

என்று சிலம்பொலி சு. செல்லப்பனார் வாழ்த்து கிறார்.

**சீராரும் வாழியூர் செம்மையுறக் கம்பனின்
பேராரும் சங்கமதைப் பெற்றியுடன் - ஊராரும்
மற்றவரும் ஓங்குபுகழ் பெற்றிடவே நாட்டினார்
கற்றவர் போற்றிக் களிக்க.**

என்று காட்பாடி பேராசிரியர் புரிசை. ச. அரங்கநாதன் வாழ்த்துகிறார்.

இவ்வாறு பலரும் வாழ்த்திய இக்கழகம் 30-ம் ஆண்டு தன்னுடைய அடியை எடுத்து வைக்கிறது. இதன் செயலாளராக வாழியூர் வே. இராசவேலன் 30 ஆண்டுகளாகக் கம்பனுக்குத் தொண்டாற்றி வருகிறார். அவர் கம்பனிலும் இலக்கியத்திலும் பல நூல்கள் எழுதியுள்ளார்.

வாழியூருக்கு இன்னொரு சிறப்பையும் சொல்லியாக வேண்டும். இங்கு சிற்பக் கலைஞர்கள் நிறைய பேர் இருக்கின்றார்கள். தமிழ்நாட்டின் பல இடங்களில் கோயில் சிற்பங்கள் இவர்கள் பெயரைக் கூறும்.

முதன் முதலாக சிற்பக் கலையை தொடங்கி வைத்தவர்கள் சிற்பி கண்ணப்பா அவர்களின் மூதாதையர் ஆவர். இன்று இருக்கும் சிற்பிகளில் பெரும் பாலோர் அவருடைய சீடர்கள்தான்.

இவ்வூரின் எல்லையில் சோலை வாழி அம்மன் ஆலயம் உள்ளது. அவ்அம்மன் மிகவும் சத்தியுள்ளது. நம்முடைய துன்பத்தையெல்லாம்

போக்குபவள். அம்மனை தினமும் தரிசித்தால் நம்முடைய நோய் அகலும். அவ்அம்மனை வணங்கினால் திருமணம் ஆகாதவர்களுக்கும் திருமணம் ஆகும். அவ்ஆலயத்தில் உள்ளே அமர்ந்து இறைவனை எண்ணிக்கொண்டு இருந்தால்மனம் அமைதி பெறும்.

மற்றொரு சிறப்பு வாழியூருக்கு உண்டு. அரசு மழைநீர் தேக்குவது பற்றி சொல்லி வருகிறது. உண்மையில் மழைநீரை சேமித்து வைக்க அதிக மான குளங்களை அமைத்தது வாழியூர். ஆம்! வாழியூரைச் சுற்றி ஏழு குளங்கள் இருந்ததாகக் கூறுவர். ஆனால் இப்பொழுது குளங்களாகவும், குட்டைகளாகவும் மூன்று தான் இருக்கின்றன. மற்றைய குளங்கள் தூர்ந்ததா! தூர்க்கப்பட்டதா? தெரியவில்லை.

வாழியூரில் பெரும்பாலோர் விவசாயிகள். இங்கு விவசாயம் சிறப்பாக நடைபெறுகிறது.

- இராச. பேரரசு, வாழியூர்.

*** வில்வராணி :**

இவ்வூர் போளூரிலிருந்து செங்கம் செல்லும் வழியில் சுமார் 13 கி.மீ . தொலைவில் உள்ளது. இவ்வூரைச் சுற்றிலும் இருந்த கச்சேரி மங்கலம், அம்பாவரம். நவுந்தப்பாளையம் ஆகிய ஊர்கள்

இன்று இல்லை. ஆனால் ஊர்ப் பெயர்கள் மட்டும் புழக்கத்தில் உள்ளன.

இவ்வூர் வில்வமரங்கள் நிறைந்த காடாக இருந்தது. ஆகவே வில்வ ஆரண்யம் என அழைக்கப் பட்டு இப்பொழுது வில்வாரணி என அழைக்கப் படுகிறது.

இன்று வில்வராணியைச் சுற்றி மேலாரணி, சேங்கப்புத்தூர், வன்னியனூர்,மோட்டூர், நட்சத்திர கோயில், எலத்தூர், சோழவரம், எர்ணாமங்கலம் ஆகிய ஊர்கள் உள்ளன.

பாரத சொற்பொழிவாளர்கள், எடுத்துச் சொல்லிகள், புலவர்கள், மகாவித்துவான்கள், ஆசிரியர்கள், பல்துறை அலுவலர்கள், தெருக்கூத்து கலைஞர்கள் இருந்த, இருக்கின்ற ஊர் வில்வராணி.

- இரா. இராதாகிருஷ்ணன், ஆர்க்காடு.

*** வீராணம் :**

இவ்வூர் தண்டராம்பட்டு ஒன்றியத்தில் உள்ளது. பெண்ணையாற்றின் வடகரையில் உள்ளது. திருவண்ணாமலையிலிருந்து தண்டராம் பட்டு வழியாக சாத்தனூர் அணை போகும் வழியில் திருவண்ணாமலையிலிருந்து சுமார் 20 கி.மீ. தொலைவில் உள்ளது.

தஞ்சைச் சோழர் குடியின் ஆதிக்கத்திற்கு அடிப்படையானவன் பராந்தக சோழன். இவனது விருதுப் பெயர்களில் ஒன்று வீரநாராயணன் என்பதாகும். இப்பெயரால் வழங்கப்பட்டதே வீரணம் என்ற இவ்வூராகும்.

**- வாழியூர் வே. இராசவேலன்.**

*** வெங்காய வேலூர் :**

திருவண்ணாமலை - போளூர் சாலையில் இனாம் காரியந்தல் உள்ளது. இனாம் காரியந்தலுக்கு மேற்கே 2 கி.மீ. சென்றால் இவ்வூரை அடையலாம். இவ்வூர் துரிஞ்சாபுரம் ஒன்றியத்தில் உள்ளது.

இப்பகுதியில் வாழ்ந்த மக்களுக்கும், இராய வேலூர் பகுதியில் வாழ்ந்த இருவேறு நவாப் இனமக்களுக்குமிடையே பகை உருவாகி இரு பிரிவினரும் சண்டையிட்டனர். அது போழ்து வேலூர் சார்ந்த நவாப் பலர் காயம்பட்டு இறந்தனர். இவர்கள் பெற்ற வெம்+ காயம் வெங்காயமாகி இதனுடன் வேலூர் சேர்ந்து வெங்காய வேலூர் என்று ஆயிற்றாம். இதற்கான சில நடுகற்கள் உள்ளன என்றும் இப்பகுதி மக்கள் தெரிவிக் கின்றனர்.

இப்பகுதியில் சிறப்பு ஒன்று உள்ளது. இங்கு தீர்த்தம் தரும் மலை உள்ளது. இம்மலை கௌத்தி

மலை என்று அழைக்கப்படுகிறது. இங்கு வேடியப்பன் கோயில் உள்ளது. ஆதலால் இம் மலையை வேடியப்பன் மலை என்றும் அழைக் கின்றனர்.

இம்மலையின் மேலுள்ள தீர்த்தத்தை பல பகுதி மக்களும் எடுத்துச் செல்கின்றனர். இத்தீர்த்தத்தை மருந்தாகப் பயன்படுத்துகின்றனர். நோய் நீங்கப் பெறுகின்றனர்.

இம்மலைப் பகுதியில் அதிக அளவு இரும்புத் தாது உள்ளதாக இன்று அரசு உறுதி செய்துள்ளது.

- சொ. சே. இளங்கோவன், வேங்கிக்கால்..

'வெங்காயம்' என்று சொல்லும்போது ஒரு செய்தி நினைவுக்கு வருகிறது. ஒரு தனிப்பாடல். சொக்கநாதப் புலவர் என்று ஒருவர் இருந்தார். அவர் ஒருமுறை சுவாமி மலை சென்றார். அங்கு கோயில் கொண்டிருக்கும் முருகன் மீது ஒரு பாடலைப் பாடினார். அப்பாடல் இரண்டு பொருள் தரக் கூடியது.

**வெங்காயஞ் சுக்கானால் வெந்தயத்தால் ஆவதென்ன**
**இங்கார் சுமந்திருப்பார் இச்சரக்கை - மங்காத**
**சீரகத்தைத் தந்தீரேல் தேடேன் பெருங்காயம்**
**ஏரகத்துச் செட்டியா ரே.**

என்பது அப்பாடல் இப்பாடலில் வெங்காயம், சுக்கு, வெந்தயம், சீரகம், பெருங்காயம் என மளிகைப்

பொருள்கள் வந்தாலும், இப்பாடலின் உள் பொருளைக் கவனிக்க வேண்டும்.

வெம்+காயம்=கொடிய இவ்வுடல் தவம் முதலியவற்றால் சுக்கு போல் இளைத்து விட்டால் அயன் செந்தூரம் சாப்பிடுவதால் ஒரு பயனும் இல்லை. எனக்கு சிறந்த அகமாகிய மோட்சத்தைத் தந்தால் பலவுடல்கள் எடுக்கக்கூடிய தொல்லை இருக்காது. (அதாவது மீண்டும் பிறக்க மாட்டேன்) என்கிறார்.

வேலூரைச் சார்ந்த இவ்வீரர்களுக்குக் கொடிய காயம்பட்டிருக்கும் ஆகவே வெம்+காய+வேலூர் என்பது வெங்காய வேலூர் என ஆகியிருக்கும் வேலூர் என்பது, வேலூர் வீரர்களைக் குறித்தது.

- வாழியூர் வே. இராசவேலன்.

*** வேங்கிக்கால் :**

இவ்வூர் திருவண்ணாமலை ஊராட்சி ஒன்றியத்தில் உள்ளது. போளூர் - திருவண்ணா மலை சாலையில் திருவண்ணாமலையிலிருந்து சுமார் 2 கி.மீ. தொலைவில் நகருக்கு வடக்கேயுள்ளது. கிரிவலப்பாதையின் வடக்குதிசையில் கிழக்கு - மேற்கே 3 கி.மீ. வடக்கே தெற்கு 4 கி.மீ. ஆக 12. ச.கி. மீட்டர் பரப்பு உள்ள கிராமம் வேங்கிக்கால்.

ஒரு காலத்தில் இங்கு காடாக இருந்தது. வேங்கைப்புலிகள் இங்கு வாழ்ந்தன. அவை கால் பதித்த இடம் ஆதலால் வேங்கிக்கால் எனப் பெயர் பெற்றது என்பர்.

இந்தப் பகுதியில்தான் திருவண்ணாமலை மாவட்ட ஆட்சித் தலைவர் அலுவலகம் உள்ளது. இப்பகுதியில்தான் ஆட்சித் தலைவர் குடியிருப்பு. மாவட்ட காவல்துறை அலுவலகம், அவருடைய குடியிருப்பு, மாவட்டத்தின் விளையாட்டுத் தலைமை இடம் முதலியன அமைந்துள்ளன. இப்பகுதியில் தான் தமிழக அரசு போக்குவரத்து சிட்கோ பேருந்து பணிமனையும், மின்சார இலாகாவின் தமிழ்நாடு மாவட்ட கண்காணிப்பு பொறியாளர் தலைமையிடமும் உள்ளன. இங்குதான் துணை மின்சார நிலையம் ஒன்று உள்ளது. திருவண்ணாமலை நகருக்கு மின்சாரம் வழங்கும் நிலையம் இதுவேயாகும். தமிழக அரசின் தொழில் பயிற்சிப் பள்ளி (ITI) இங்குள்ளது. இங்கு அரசு நடுநிலைப் பள்ளியும், தனியார் பள்ளிகளும் உள்ளன. திருவாவடுதுறை ஆதினத்தின் சைவ சித்தார்ந்த நேர்முகப் பயிற்சி மையம் இங்குள்ளது.

வேங்கிக்கால் பகுதியில் கிரிவலப் பாதையில் 7வது கோயிலாக குபேரலிங்கம் கோயில் உள்ளது.

கிரிவலப் பாதையில் இடுக்குப் பிள்ளையார் கோயில் என்ற பெயரில் ஸ்ரீ விநாயகர் கோயில்

அமைந்துள்ளது. அங்கு குறுகிய வழியில் மக்கள் நுழைந்து வந்து இறைவனை வணங்குவது மிகவும் சிறப்பானது.

- டி. பாலாஜி சிவசங்கரி, வேங்கிக்கால்.

*** ஜம்னாமரத்தூர் :**

இவ்வூர் ஜவ்வாது மலை ஒன்றியத்தில் உள்ளது. போளூரிலிருந்தும், வாணியம்பாடியி லிருந்தும் இவ்வூருக்குச் செல்லலாம்.

ஜம்பு என்றால் நாவல் என்று பொருள். இங்கு நாவல் மரங்கள் அதிகமாக இருந்தது. ஆகவே ஜம்பு மரத்தூர் என்று அழைக்கப்பட்டு இப்பொழுது ஜம்னாமரத்தூர் என்று அழைக்கப்படுகிறது.

இங்குள்ள பெருநாவல் மரத்தின் கனியை உண்டவர்கள் நோய் நொடி ஏதுமின்றி நீண்ட நாள்கள் வாழ்வார்கள் என்பது ஐதீகம்.

- ஆ. குருசாமி, அத்திமூர்.

## செய்யாறு கோட்டம்

*** அக்ராபாளையம் :**

இவ்வூர் ஆரணிவட்டம், ஆரணி ஒன்றியத்தில் உள்ளது. ஆரணிக்கு வடமேற்கே ஆரணியிலிருந்து சுமார் 8 கி.மீ. தொலைவில் உள்ளது. சேவூர் வழியாக இவ்வூருக்குப் பேருந்து வசதி உண்டு.

திம்மப்ப நாயக்கர் ஆட்சி செய்த காலத்தில் இங்கு பிராமணர்களுக்கு என ஒரு தெரு அமைத்தார். அத்தெருவிற்கு அக்ரஹாரம் என பெயரிட்டார். மற்ற நாயக்கர்கள் வாழும் பகுதிக்கு பாளையம் எனப் பெயரிட்டார். பின்னர் அக்ரகாரம் என்ற அப்பகுதி அக்ராபாளையம் என மாறி விட்டது.

- வாழியூர் வளவன்.

*** அடையபுலம் :**

இவ்வூர் ஆரணியிலிருந்து சுமார் 7 கி.மீ. தொலைவில் உள்ளது. ஆரணி ஒன்றியத்தைச் சேர்ந்தது. ஆரணியிலிருந்து சேவூர் வழியாக இவ் வூரை அடையலாம். சேவூரிலிருந்த சுமார் 4 கி.மீ.

இவ்வூர் முதலில் அடைய பலம் என்றுதான் வழங்கப்பட்டது. இவ்வூருக்குச் சென்று அங்கு வாழ்ந்த அப்பைய தீட்சதர் வாய்ச்சொல் கேட்டால் பலம் அடையலாம். என்ன பலம்? ஆத்ம பலம்! இவ்வூர் அடைய, ஆத்ம பலம்பெறலாம்.

அடைய பலம் என்பது மருவி அடைய புலம் ஆயிற்று என்பர்.

- கவிஞர். க. பரமசிவம். ஆரணி.

சுமார் 450 ஆண்டுகளுக்கு முன் இங்கு அப்பைய தீட்சதர் என்பவர் வாழ்ந்து வந்தார். அவர் சிவபெருமானின் அம்சமாக வந்தவர் என்பர்.

சிறுவயதிலேயே வேதங்களிலும், சாஸ்திரங் களிலும் தேர்ச்சி பெற்று இருந்தார். சிவார்க்கமணி தீபிகா என்னும் நூலை எழுதினார். இந்நூல் எழுதியமைக்கு வேலூர் அரசன் சின்னபொம்ம நாயகன் இவரைப் பாராட்டினார். பாராட்டியது மட்டுமல்ல! இவருக்குக் கனகாபிஷேகம் செய்வித்தான் என்று சான்றுகள் உள்ளன.

அப்பைய தீட்சதர் தனக்குக் கிடைத்த தங்கத்தை நல்ல பயனுள்ள வகையில்செலவு செய்தார். ஆம்! தான் இருந்த ஊராகிய அடைய புலத்தில் சிவவிஷ்ணு பேதமில்லாமல் பார்வதி உடனுறை காலகண்டேசுவரருக்கு ஒரு ஆலயமும், ஸ்ரீ வரதராஜசுவாமிக்கு ஒரு ஆலயமும் கட்டினார்.

இவர் 104 நூல்கள் எழுதியுள்ளார். இவருடைய தம்பி மகன் நீலகண்ட தீட்சதர் மதுரையில் அரசவைக் குருவாக இருந்தார்.

அப்பைய தீட்சதர் தன்னுடைய 74-ஆம் வயதில் இறைவனடி சேர்ந்தார். இவருடைய ஜீவசமாதி இவ்வூரில் உள்ளது.

- இரா. வ. கமலக்கண்ணன், வந்தவாசி.

* அத்திமலைப்பட்டு :

இவ்வூர் ஆரணி வட்டம்,மேற்கு ஆரணி ஒன்றியத்தில் உள்ளது. இவ்வூர் வேலூர் - ஆரணி சாலையில் இருந்து மேற்கே சுமார் 10 கி.மீ. தொலைவில் உள்ளது.

மேற்கே இருந்து ஓடி வரும் நாகநதியின் வடக்குக் கரையில் அத்திமலைப்பட்டும். தெற்குக் கரையில் ஒண்ணுபுரமும் உள்ளது.

அத்திமல்லன் என்னும் மல்யுத்த வீரனுக்கு வெகுமதியாகக் கிடைத்த தால் அத்திமலைப்பட்டு என அழைக்கப்படுகிறது. முதலில் இவ்வூர் சீனிவாச புரம் என்றும் வழங்கப்பட்டது.

இங்கு அப்பைய தீட்சிதர் காலத்தில் கட்டப்பட்ட அருள்மிகு அபிதகுஜாம்பாள் உடனுறை அருணாலேஸ்வரர் கோயில் உள்ளது.

- வ. செந்தமிழ்ச் செல்வன்,
கண்ணமங்கலம்.

*** அப்பநல்லூர் (எ) அம்மாபாளையம் :**

இவ்வூர் ஆரணிவட்டம், மேற்கு ஆரணி ஒன்றியத்தைச் சேர்ந்தது. இவ்வூர் கண்ணமங்கலத்தி லிருந்து கிழக்கே சுமார் 1 கி.மீ. தொலைவில் உள்ளது.

நாகநதியின் மேற்கு கரையில் உள்ள சிங்காரத் தோப்பில் அன்னை அமிர்தவல்லியுடன் அப்ப நாதீஸ்வரர் அருளாட்சி புரிந்து வருகிறார்.

வேலூர் அரசன் சின்ன பொம்மனுடைய அவையில் ஆஸ்தான வித்வானாக இருந்தவர் அப்பைய தீட்சதர். இவருடைய காலத்தில் இங்கு அப்பநாதீஸ்வரர் என்ற கோயில் கட்டப்பட்டது.

அப்பநாதீஸ்வரர் கோயில் இங்கு இருப்பதால் இவ்வூருக்கு அப்பநல்லூர் என்றும், அமிர்தவல்லி தாயாருக்கு கோயில் இருப்பதால் அம்மாபாளையம் எனவும் இவ்வூர் வழங்கப்படுகிறது.

- வ. செந்தமிழ்ச் செல்வன், கண்ணமங்கலம்.

*** அய்யன்பாளையம் :**

இவ்வூர் ஆரணி வட்டம், மேற்கு ஆரணி ஒன்றியத்தில் உள்ளது. கண்ணமங்கலத்திலிருந்தும், ஒண்ணுபுரத்திலிருந்தும் தென்கிழக்கே இவ்வூர் உள்ளது. ஒண்ணுபுரத்திலிருந்து சுமார் 3 கி.மீ. தொலைவில் உள்ளது. வேலூர் போளூர் சாலையில் வேலூரிலிருந்து 27 கி.மீ. தொலைவிலிருந்து கிழக்கே

சுமார் 2 கி.மீ. தொலைவு சென்றால் இவ்வூரை அடையலாம். வாழியூரிலிருந்து ஆரணி செல்லும் பேருந்துகள் இவ்வழியாகத்தான் செல்கின்றன.

இவ்வூரில் ஒரு குன்று உள்ளது. குன்றின் மீது பெருமாள் கோயில் உள்ளது. இது கி.பி. 14 ஆம் நூற்றாண்டில் கட்டப்பட்டது. விசயநகர மன்னன் ஒருவன் இதனைக் கட்டினான். சுமார் 2000 அடி உயரத்தில் இக்கோயில் கட்டப்பட்டது.

இக்கோயிலுக்கு பூசை செய்ய அடிவாரத்தில் ஐயர்கள் இருந்தனர். இவர்கள் கோயிலுக்கு விளக்கேற்றவும், பூசை செய்யவும் விளை நிலங்கள் வழங்கப்பட்டது. இவர்கள் வசிக்க இடமும் விடப் பட்டது. இவர்களுக்கு விடப்பட்ட அந்த அக்ரஹாரப் பகுதியே ஐயர் பாளையம் என அழைக்கப்பட்டு இன்று ஐயம்பாளையம் என அழைக்கப்படுகிறது.

பேச்சு வராதவர்கள் இக்கோயிலுக்கு வந்து இறைவனை வணங்கினால் பேச்சு வரும் என்பது ஐதீகம்!

- வ. செந்தமிழ்ச் செல்வன், கண்ணமங்கலம்.

* அழகு சேனை :

இவ்வூர் ஆரணி வட்டம், மேற்கு ஆரணி ஒன்றியத்தில் உள்ளது. கண்ணமங்கலத்திலிருந்து தென்மேற்கே சுமார் 2 கி.மீ. தொலைவில் உள்ளது.

படைவீட்டை தலைநகராகக் கொண்டு ஆண்ட சம்புவராய மன்னர்களின் சேனை இங்கு இருந்தது. அச்சேனையின் அணிவகுப்பு நடந்போது அழகாக இருந்ததாம். ஆகவே இவ்விடம் அழகு சேனைப்படை என பெயர் ஏற்பட்டு பின்னர் சுருங்கி அழகுசேனை என வழங்கலாயிற்று என்று கூறுவர்.

**- கோ. செகதீசன்,** அழகுசேனை.

*** அனக்காவூர் :**

இவ்வூர் செய்யாற்றின் வடகரையில் உள்ளது. இவ்வூர் செய்யார் வந்தவாசி சாலையில் செய்யாரி லிருந்து 2 கி.மீ. தொலைவில் உள்ளது.

இவ்வூர் செய்யாற்றுக்கு அருகில் அணுகும் ஊராக உள்ளது. அதாவது விரைவில் இவ்வூரைச் சென்று அடைய முடியும். ஆகவே அணுகும் ஊர் என அழைக்கப்பட்டு 'அனக்காவூர்' என்று ஆயிற்று.

இங்கு ஊராட்சி ஒன்றிய அலுவலகம் உள்ளது.

- த.கோ. சம்பந்தம், செய்யாறு.

*** அனப்பத்தூர் :**

இவ்வூர் செய்யார்வட்டம், அனக்காவூர் ஒன்றியத்தைச் சார்ந்தது. செய்யாரிலிருந்து

உத்திரமேரூர் செல்லும் சாலையில் செய்யாரி லிருந்து சுமார் 2 கி.மீ. தொலைவில் இவ்வூர் உள்ளது.

சமணர்கள் சம்பந்தருடன் வாதம் செய்தனர். புனல்வாதம் புரிந்தனர். சமணர்களும், சம்பந்தரும் ஓலையில் பாடலை எழுதி செய்யாற்றில் விட்டனர். சம்பந்தரின் ஓலை ஆற்றின் வேகத்தை எதிர்த்துச் சென்றது. சமணர்களின் ஓலை ஆற்றின் வேகத்தி லேயே சிறிது தூரம் சென்று கரை ஒதுங்கியது. ஓலை அனுப்பியதால் அனுப்பி வைத்த ஊர் என்பது மருவி அனப்பத்தூர் என்று வழங்குகிறது.

- த.கோ. சம்பந்தம், செய்யார்.

*** ஆக்கூர் :**

செய்யாற்றிலிருந்து வந்தவாசி செல்லும் வழியில் உள்ளது இவ்வூர். செய்யாறு வட்டம் அனக்காவூர் ஒன்றியத்தைச் சேர்ந்தது.

சம்புராநத்தம், சங்கிரிப்பட்டறை, தாத்தா பட்டறை, தானேஸ்வரன் மேடு, புரங்கவாசம், சீனிவாசபுரம் என்ற ஆறு ஊர்களின் கூட்டமான தால் ஆக்கூர் என்று பெயர் பெற்றது.

- இரா. வ. கமலக்கண்ணன், வந்தவாசி.

*** ஆரணி :**

இந்நகரம் ஆரணி வட்டத்தின் தலைநகரம். இந்நகரம் வழியாகப் பல இடங்களுக்குப் பேருந்து

கள் செல்கின்றன. இப்பொழுதுதான் ஆரணி வருவதற்கு புகை வண்டி பாதை அமைக்கப் படுகிறது. இங்கிருந்து சுமார் 9 கி.மீ. தொலைவில் களம்பூர் உள்ளது. அவ்வூரிலிருந்து புகைவண்டி நிலையத்திற்கு (Railway station) ஆரணி ரோடு என்று பெயர். ஆம்! புகைவண்டியில் வருபவர்கள் அங்கு இறங்கிதான் ஆரணி வரவேண்டும்.

படைவீடு கிராமத்தின் அருகில் ஜவ்வாது மலை உள்ளது. அம்மலையில் கமண்டல ஆறு உற்பத்தியாகிறது. கண்ணமங்கலம் அருகே அமர்தி மலை உள்ளது. அம்மலையில் நாகநதி உற்பத்தி யாகிறது.

இவ்விரண்டு நதிகளும் ஆரணிக்கு அருகே யுள்ள சம்புவராயர்நல்லூர் என்ற இடத்தில் இணைகிறது. அது கமண்டலநாக நதியாகி ஆரணிக்கு அழகு சேர்க்கின்றது. ஆறு அண்மையில் ஓடுவதால் ஆறணி என்று வழங்கப்பட்டு இப் பொழுது ஆரணி என அழைக்கப்படுகிறது.

அங்கு அத்திமரங்கள் மிகுதியாக இருந்தன. (ஆர் - அத்தி) ஆகவே ஆரணி என்று பெயர் வந்ததாகக் கூறுவர்.

கமண்டலநதிக்கரையில் அத்திமரங்கள் மிகுந்து இருந்தன. கரிகாலன் என்ற மன்னன் அத்தி மரக்காடுகளை அழித்து ஊராக்கினான்.

கி.பி. 1361-ஆம் ஆண்டு படைவீடு என்ற இடத்தில் சம்புவராயரின் கோட்டை இருந்தது. கோட்டைக்கு அருகில் சண்டை நடந்தது அங்கிருந்த மக்கள் ஆரணிக்கு வந்து விட்டனர். கி.பி. 1638ல் நடைபெற்ற கர்நாடகப் போரில் ஹாஜி என்பவர் தனக்கு உதவி செய்த வேதாதி பாஸ்கர பந்த் என்பவருக்கு ஆரணி முழுவதையும் அன்பளிப்பாக வழங்கினார். அவருடைய காலத்தில்தான் ஆரணி விரிவுபடுத்தப்பட்டது. 1670ல் ஜிஸ்பர்க்கான் என்பவரால் 'ஜாகிர்' வசம் இருந்த ஆரணி கைப் பற்றப்பட்டது. கி.பி. 1761- ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் திப்பு ஆங்கில உடன் படிக்கையால் கர்நாடக நவாபுக்கு ஆரணி மாற்றப்பட்டது.

ஆரணியில் பெரிய கோட்டை இருந்தது. அது இப்பொழுது இடிந்த நிலையில் உள்ளது. கோட்டையைச் சுற்றி பெரிய அகழி உள்ளது. இன்று அந்த அகழியும் பாழடைந்து தூர்க்கப்பட்டு வருகிறது.

அகழியை அடுத்து நுழைவு வாயில் அருகில் பெரிய சாலை செல்கின்றது. அதற்கு அடுத்து சூரியகுளம், சந்திரகுளம் அமைக்கப்பட்டுள்ளது.

இப்பொழுது ஆரணி கோட்டையினுள்ளே அரசு ஆண்கள், பெண்கள் மேல்நிலைப்பள்ளி களும். சு.சா. மேல்நிலைப்பள்ளியும், ஊராட்சி ஒன்றிய அலுவலகமும், வட்டாட்சியர் அலுவலக

மும், நகரக் காவல் நிலையமும், மற்றும் பல அலுவலகங்களும் இயங்கி வருகின்றன.

சு.சா. மேல்நிலைப்பள்ளியைப் பற்றி ஒரு வரலாறு! என்ன? கி.பி. 1911ல் கார்னேஷன் ஆரம்ப பள்ளி (இலவசப் பள்ளி) ஆரம்பிக்கப்பட்டது. 1942ல் அது இலவச உயர்நிலைப் பள்ளியாக ஆனது. கி.பி.1959-ஆம் ஆண்டு சுதந்திரப் போராட்டத்தியாகி எம்.வி. சுப்பிரமணி சாஸ்திரியார் உயர்நிலைப் பள்ளி என பெயர் மாற்றம் செய்யப்பட்டது. இப்பொழுது அப்பள்ளி மேல்நிலைப்பள்ளியாக வளர்ச்சி அடைந்துள்ளது.

கி.பி.1830ல் ஆரணி கோட்டையில் ஜாகீர்தார்' தங்கியிருந்தார். ஆரணிக்கு கிழக்கே சத்திய விசயநகரம் என்ற இடம் உள்ளது. அப்பொழுது அவ்விடத்தில் ஒரு அரண்மனை கட்டப்பட்டது. அது மட்டுமல்ல! பூசிமலைக்குப்பம் என்ற இடத்தில் அரசு குடும்பங்கள் தங்குவதற்கு ஒரு சுற்றுலா மாளிகையும் கட்டப்பட்டது.

இமயமலையில் நடந்த உலக கார் பந்தயத்தில் ஆரணி ஜாகிர் மகன் கலந்துகொண்டு இரண்டாவது பரிசினைப் பெற்று ஆரணிக்குப் பெருமை சேர்த்தார்.

கி.பி. 1855ல் ஆரணி கமண்டல நாகநதி ஆற்றங்கரையில் தென் இந்திய திருச்சபை கட்டப் பட்டது. இங்குதான் முதன் முதலாக அமெரிக்கன்

ஆர்க்காடு மிஷின் பிரஸ் ஆரம்பிக்கப்பட்டு கிருத்துவ சம்பந்தமான நூல்கள் அச்சிடப்பட்டு மக்களிடம் இலவசமாக வழங்கப்பட்டன.

இங்கு அதிகமாகப் பட்டு நெசவு நடைபெற்று வருகிறது. இங்கு தயாரிக்கும் பட்டுத் துணிகள் இந்தியா முழுவதும் அனுப்பப்படுகின்றன.

1925ல்தான் வேலூரில் இருந்து ஆரணிக்கு முதன் முதலாக பேருந்து இயக்கப்பட்டது. தமிழக அரசு நீண்ட தூரப் பேருந்துகளை அரசுடைமை ஆக்கியபோது 1968ல் அரசின் முதல் பேருந்து ஆரணிக்கும் சென்னைக்கும் இயக்கப்பட்டது.

கோட்டையினுள் கைலாசநாதர் கோயில், ஆரணி கமண்டல நதியின் கரையில் புத்திரகாமேட்டி ஈஸ்வரர் கோயில், ஆரணி பாளையத்தில் வேதகிரி ஈஸ்வரர் கோயில், சுப்பிரமணிய சாஸ்திரியார் தெருவில் இராமர் கோயில், அருணகிரி சத்திரத்தில் அருணாச்சலேசுவரர் கோயில் ஆகியவை மிகப் பழமையான கோயில்கள் என கூறப்படுகிறது. இக்கோயில்கள் இறை பக்தியை வளர்த்து வருகின்றன.

ஆரணியில் இலக்கிய உணர்வுக்கும் பஞ்ச மில்லை. கவிஞர். க. பரமசிவம் அவர்கள் கவிஞர் கழகத்தைத் தோற்றுவித்து பல கவிஞர்களை உருவாக்கியுள்ளார். இரண்டு கவிஞர் மாநாடுகளை நடத்தி இருக்கிறார். இரண்டு மாநாடுகளுக்கும்

கவிஞர் சுரதா தலைமை தாங்கி சிறப்பித்து உள்ளார். கவிஞர் க. பரமசிவம் அறச்சுவடு என்ற கலை இலக்கிய இதழைத் தொடங்கி பல எழுத்தாளர்களை உருவாக்கி யுள்ளார்.

தமிழியக்கம் என்ற ஒரு அமைப்பினை திருவாளர்கள் முரகரி, ரா. கிருஷ்ணமூர்த்தி, ப. நாராயணமூர்த்தி ஆகியோர் தொடங்கி மக்களிடம் தமிழ் உணர்வினை வளர்த்தனர்.

ஆரணி ஆறு ஓடுவதனால் மட்டும் அழகு பெறவில்லை இறையுணர்வு, கல்வி, இலக்கியம், தொழில் இப்படி பலவற்றாலும் அழகு பெறுகிறது.

- வாழியூர் வே. இராசவேலன்

*** ஆவணியாபுரம் :**

இவ்வூர் ஆரணியிலிருந்து வந்தவாசி செல்லும் சாலையிலிருந்து சிறிது தூரத்தில் உள்ளது. ஆரணி யிலிருந்து சுமார் 12 கி.மீ. தொலைவில் உள்ளது. இவ்வூர் பெரணமல்லூர் ஒன்றியத்தைச் சேர்ந்தது.

அவணி நாராயணன் என்ற மூன்றாவது நந்தி வர்மனின் சிறப்புப் பெயரால் இது அழைக்கப் பட்டது. ஆவணி சதுர்வேதி மங்கலம் - அவணி நாராயணபுரமாகி இப்பொழுது ஆவணியாபுரம் என அழைக்கப்படுகிறது.

ஆவணியாபுரம் மேல் மலை மீது பெருமாள் சந்நிதிகள் மூன்று இருக்கின்றன. கீழ்மலையில் அருள்மிகு இலட்சுமி நரசிம்மர் சந்நிதி உள்ளது.

**- இரா. வ. கமலக்கண்ணன்,** வந்தவாசி.



*** இஞ்சிமேடு :**

இவ்வூர் வந்தவாசி வட்டம் பெரணமல்லூர் ஒன்றியத்தைச் சேர்ந்தது. பெரணமல்லூரிலிருந்து சுமார் 2 கி.மீ. தொலைவில் உள்ளது.

இஞ்சிமேடு - இஞ்சி விளைந்த மேட்டுப்பகுதி யானதால் இப்பெயர் பெற்றது என்பர்.

இங்குள்ள பெரியமலை என்ற அழகிய குன்றில் சிவன் கோயில் உள்ளது. அக்கோயிலுக்கு அருள்மிகு திருமனிச்சேரையுடையார் திருக் கோயில் என்று பெயர். இது சுமார் 1100 வருடங்களுக்கு முன் கட்டப்பட்டது.

“இஞ்சி மேடு என்ற ஊர் வழக்கில் இஞ்சிவேடு என்றும் விக்கிரம சோழன் காலத்தில் கி.பி. 1126ல் கோயில் நிறுவப்பட்டதாகவும், கடவுளின் பெயர் திருமணிச் சோழை இறை உடையார். என்றும் திருவாலங்காட்டு மணலிக்கிழார் சேந்தன் என்பவர் கோயில் படிகளைச் செதுக்கினார்” என்றும் அங்குள்ள கல்வெட்டு கூறுகிறது.

இங்குள்ள சிவன் உருவம் மிக அழகாக உள்ளது. அதனால்தான் திருமணி என்ற பெயர் வந்தது போலும். உடையார் என்றால் சிவன் என்று பொருள். அழகிய சிவன் என்ற பொருளில் திருமணி சோழை இறை உடையார் என்று பெயர் வந்தது போலும்.

இச்சிவன் கோயில் பற்றி ஒரு சில வரிகள்! இச்சிவன் கோயில் ஒரு காலத்தில் சிறியதாக இருந்தது. அதாவது சிறிய குகைக்கோயிலாக இருந்தது. அக்குகைக் கோயிலில் ஒரு சிவலிங்கம் இருந்தது.

அவ்வூரிலுள்ள இராஜா என்பவர் தினமும் நெய்தீபம் ஏற்றி வந்தார். ஆகவே அவருக்கு நெய் தீபமுனிவர் என்றே பெயர் ஏற்பட்டது. தன்னுடைய தள்ளாத வயதிலும் இப்பணியைச்செய்து வந்தார்.

அவர் பிள்ளைகள் மேற்படி கோயிலை விரிவுபடுத்த விரும்பினர். அவர்களில் முக்கிய மானவர் திருமிகு. ஐ.ஆர். பெருமாள் அவர்கள். அன்னார் பெங்களூரில் இருக்கிறார். மாவட்ட ஆட்சித் தலைவர் பொறுப்பில் இருப்பவர்.

தவநெறி ஒழுக்கத்துடன் வாழ்பவர். கருநாடகப் பண்பாட்டு அமைப்பின் தலைவராக இருப்பவர்.

உலகக் கவிஞர் பூங்காவின் கருநாடக மாநிலத்தின் துணைத் தலை வராகவும் இருப்பவர் பல பட்டங்களையும், விருதுகளையும் பெற்றவர். பல நூல்களை எழுதியவர்.

இக்கோயில் தமிழ்நாடு, இந்தியா அளவிற்கு புகழ் பெறுவதற்கு அவருடைய ஒத்துழைப்பு இன்றியமையாதது. அவராலும், ஊர் பெரியவர் களின் முயற்சியாலும் இக்கோயில் வளர்ச்சி யடைந்து வருவதை மறுக்க இயலாது. இங்குள்ள அம்மையின் பெயர் அருள்மிகு. திருமண நாயகி அம்மையார்.

- துரை. கண்ணன், இஞ்சிமேடு.

*** இரகுநாத சமுத்திரம் :**

நெடுங்குணத்திற்கு வடகிழக்கில் சுமார் 3 கி.மீ. தொலைவில் இவ்வூர் உள்ளது. இது தெள்ளார் ஒன்றியத்தைச் சேர்ந்தது.

தஞ்சை நாயக்க மன்னர்களில் புகழ்பெற்ற அரசன் இரகுநாத நாயக்கன். இவன் பெயரால் ஏற்பட்டதே இவ்வூர்.

- **இரா. வ. கமலக்கண்ணன்**, வந்தவாசி.

*** இராட்டிணமங்கலம் :**

இவ்வூர் ஆரணியிலிருந்து வடக்கே சுமார் 3 கி.மீ. தொலைவில் உள்ளது. ஆரணி வட்டம், ஆரணி ஒன்றியத்தில் உள்ளது.

இராஷ்டிரகூட வம்சம் ஆரணியை ஆட்சி செய்த போது இவ்வூர் ஏற்பட்டது. 'ரஷ்டி.மங்கலம்' என அப்பொழுது அழைக்கப்பட்டது. பின்னர் அது மருவி இராட்டிணமங்கலம் என அழைக்கப் படுகிறது.

- **மு. கண்ணன்**, செய்யார்.

*** இராமசமுத்திரம் :**

இவ்வூர் தெள்ளார் ஒன்றியத்தில் உள்ளது. ஏம்பலத்திலிருந்து கிழக்கில் சுமார் 3 கி.மீ. தொலைவிலும், தெள்ளாரிலிருந்து சுமார் 10 கி.மீ. தொலைவிலும் உள்ளது.

இராமனுடைய பெயரால் ஏற்பட்ட ஊர் இது. ஆகவே இராமசமுத்திரம் என அழைக்கப்படுகிறது.

- **இரா. வ. கமலக்கண்ணன்**, வந்தவாசி.

*** இராமசாணி குப்பம் :**

இவ்வூர் ஆரணி வட்டம், மேற்கு ஆரணி ஒன்றியத்தில் உள்ளது. ஆரணியிலிருந்து சுமார் 14 கி.மீ. தொலைவிலும், வேலூரிலிருந்து சுமார் 24 கி.மீ. தொலைவிலும் உள்ளது. வேலூரிலிருந்து போளூர் சாலையில் சுமார் 23 கி.மீ. தொலைவிலிருந்து கிழக்கே சுமார் 1 கி.மீ. தொலைவில் இவ்வூர் உள்ளது. ஆரணியிலிருந்து கீழ்நகர், புதுப்பாளையம்

ஒண்ணுபுரம் வழியாக இவ்வூருக்கு பேருந்து வசதி உண்டு.

இராமசாமி குப்பம் என்பது மருவி இராமசாணி குப்பம் என வழங்கி வருகிறது. ஆரணி ஜாகீரராயிருந்த போது இவ்வூரில் இராமசாமி என்பவர் சிறப்பாக வாழ்ந்து வந்தார். அவர் பெயராலேயே இவ்வூருக்கு இராமசாமி குப்பம் என பெயர் உண்டாயிற்று.

இவ்வூருக்கு துருகம் என்று ஒரு பெயரும் உண்டு. துருகம் என்றால் மலைமேல் இருக்கும் கோட்டை என்று பொருள். இவ்வூருக்கு தெற்கே மலை ஒன்று உள்ளது. அம்மலைமேல் நவாப் காலத்தில் கோட்டை ஒன்று கட்டப்பட்டது.

ஆகவே மலையின் கீழ் இருக்கும் இவ்வூருக்கும் துருகம் என்று பெயராயிற்று.

நவாப் காலத்தில் கட்டப்பட்ட இக்கோட்டை இன்று பழுதடைந்துள்ளது. அக்கோட்டையின் ஒரு சில பகுதிகள் காணப்படுகின்றன.

யானைகள் கட்டிய இடம், குதிரைகள் கட்டிய இடம் என இன்றும் அவை பழுதடைந்த நிலையில் உள்ளன. இம்மலை மேல் ஒரு கோயில் உள்ளது. அதுவும் பழுதடைந்த நிலையில் உள்ளது. இதை யெல்லாம் பழுது பார்த்தால் இது ஒரு சுற்றுலா

தலமாகவும், வழிபாட்டுக்குரிய தலமாகவும் ஆவதற்கு வாய்ப்பு உண்டு.

இம்மலையில் ஒரு சுனை உள்ளது. அச்சுனையில் வருடம் முழுவதும் நீர் இருந்து கொண்டு இருக்கும்.

ஊருக்கு மேற்கே பிரசன்ன வேங்கடேச பெருமாள் கோயில் ஒன்று ஆரணியை ஜாகீர்தார் ஆண்டபொழுது கட்டப்பட்டது. அதன் மதில் சுவர்கள் பழுதடைந்த நிலையில் உள்ளது. பக்கத்தில் குளம் ஒன்றும் உள்ளது.

பெருமாள் கோயிலுக்கு அருகே சிவன் கோயில் ஒன்று இருந்தது. அது முழுவதும் பழுதடைந்து விட்டது. அங்குள்ள சிவலிங்கத்தைக் கொண்டு வந்து ஊருக்கு கிழக்கே கோயில் கட்டி, லிங்கத்தைப் பிரதிஷ்டை செய்து இருக்கிறார்கள். இங்கு சித்தர்கள் வாழ்ந்ததாகக் கூறுகிறார்கள். அவர்களுக்காக இங்கு மடம் இருந்தது. வழிபடுவதற்கு லிங்கமும் இருந்தது. இப்பொழுது லிங்கம் மட்டும் உள்ளது. கட்டிடம் அழிவடைந்து விட்டது. அங்கு கட்டிடம் கட்ட ஊர் மக்கள் முயற்சி எடுத்து வருகிறார்கள்.

இங்கு பட்டு நெசவு நடைபெற்று வருகிறது. இங்கு தயாரிக்கப்படும் பட்டு பல முக்கிய இடங்களுக்கு ஏற்றுமதி செய்யப்படுகின்றன.

- எம். ஆர். ருத்தரைய்ய சுவாமி, துருகம்.

*** இரும்பன் தாங்கல் :**

இவ்வூர் செய்யாறு, காஞ்சிபுரம் சாலையில் செய்யாரிலிருந்து 8 கி.மீ. தொலைவில் உள்ளது. செய்யார்வட்டம் செய்யாறு ஒன்றியத்தைச் சேர்ந்தது.

ஏரி, மதகு உடைந்து வெள்ளம் வரும். அதனைத் தாங்கும் இடம் தாங்கல். இத்தகைய இடத்தை இரும்பன் என்பவன் அமைத்துக் கொடுத்தான். ஆகவே இவ்வூர் இரும்பன் தாங்கல் எனப்பட்டது.

- த.கோ. சம்பந்தம், செய்யார்.



*** இரும்பேடு :**

ஆரணியிலிருந்து ஆர்க்காடு செல்லும் வழியில் இவ்வூர் உள்ளது.

இரும்பன் என்ற ஒரு வேடர்தலைவன் இங்கு வாழ்ந்து வந்தான். அவன் பெயரால் இவ்வூர் வழங்கப்படுகிறது.

- மு. கண்ணன், செய்யார்.

*** இளநீர்க்குன்றம் :**

செய்யாறு, வந்தவாசி, உத்திரமேரூர், காஞ்சி புரம் ஆகிய ஊர்களுக்கு இடையில் இவ்வூர் உள்ளது.

செய்யாறு, காஞ்சிபுரம், வந்தவாசி ஆகிய இவ்வூர்களிலிருந்து பேருந்து வசதி உண்டு.

குன்றும், வயலும் சேர்ந்த ஊர் ஆதலின் குறிஞ்சியும், மருதமும், மயங்கும் ஊர். செய்யாற்றின் நீர் - வாய்க்கால் வழி ஓடி வளம் சேர்க்கும் வயல்களையுடையது இவ்வூர்.

தென்னை மரங்கள் இளநீரைக் குலை குலையாகக் கொடுக்கும். அக்குலைகள் மரங்களில் இருந்து தொங்கிக் கொண்டிருக்கும் அழகே, அழகு! இவ்வாறு தென்னை மரங்கள் இளநீரைக் கொடுப்பதாலும் குன்று இருப்பதாலும் இளநீர்க் குன்றம் என்று வழங்கலாயிற்று.

காஞ்சிபுரத்தில் பல்லவர் ஆட்சி,சேயாற்றில் சோழராட்சி நடைபெற்றபோது சிறந்து விளங்கிய ஊர் இது.

இங்கு முக்கிய தொழில் விவசாயம். விலையும் விலைபொருள்களை காஞ்சிபுரம், வந்தவாசி ஆகிய ஊர்களுக்கு எடுத்துச் சென்று விற்பனை செய்கின்றனர்.

**- புண்ணிய. சுப்பிரமணி, செய்யார்.**

*** எரையூர் :**

இவ்வூர் செய்யாறு கொருக்கை வழியாக ஆரணி செல்லும் சாலையில் பாராசூர் கூட்டுச்

சாலையில் இருந்து சுமார் 1 கி.மீ. தொலைவில் உள்ளது.

அரசனுடைய படைகள் இவ்வூருக்கு அருகில் தங்கி இருந்தபோது, அப்படைகளுக்கு இவ்வூரில் உணவு (இரை) வழங்கப்பட்டது. ஆகவே இவ்வூர் இரையூர் எனப்பட்டு, அது மருவி எரையூர் எனப்படுகிறது.

இவ்வூர் செய்யாறு வட்டம், செய்யாறு ஒன்றியத்தைச் சார்ந்தது.

- அ. அமிர்தலிங்கம், மொடையூர்.

* ஏகாம்பரநல்லூர் :

இவ்வூர் சந்தவாசலுக்கு வடகிழக்கில் சுமார் 10 கி.மீ. தொலைவில் உள்ளது. ஆரணியிலிருந்து பேருந்து வசதியும், சிற்றுந்து வசதியும் உண்டு.

சம்புவராய மன்னர்களில் ஒருவர் பெயர் ஏகாம்பரநாதன் என்பதாகும். இவருடைய பெயரால் ஏற்பட்டதுதான் ஏகாம்பர நல்லூர்.

- சரவேல், வாழியூர்.

* ஏந்தல் :

ஏந்தல் என்றால் பயிர் செய்வதற்கு ஆதாரமாக அமைக்கப்பட்ட ஏரியாகும். தேக்கம் என்பதும்

பொருளாகும். ஏரியின் அருகில் அமைந்த ஊருக்கு ஏந்தல் என்று பெயர்.

இவ்வூர் மழையூரிலிருந்து 4 கி.மீ. தொலைவில் உள்ளது. பெரணமல்லூர் ஒன்றியத்தைச் சேர்ந்தது.

- இரா. வ. கமலக்கண்ணன், வந்தவாசி.

*** ஏம்பலம் :**

இவ்வூர் தெள்ளாறிலிருந்து வடகிழக்கில் 6 கி.மீ. தொலைவில் உள்ளது. தெள்ளார் ஒன்றியத்தைச் சேர்ந்தது.

அம்பலம் என்றால் பெருவெளி. ஏகஅம்பலம் என்றால் ஒரே பெருவளி என்பதாகும். இவ்வூர் ஏகஅம்பலம் என வழங்கி இப்பொழுது ஏம்பலம் என வழங்கப்படுகிறது.

- இரா. வ. கமலக்கண்ணன், வந்தவாசி.

*** ஒண்ணுபுரம் :**

இவ்வூர் ஆரணி வட்டம், மேற்கு ஆரணி ஒன்றியத்தைச் சேர்ந்தது. ஆரணியிலிருந்து சுமார் 12 கி.மீ. தொலைவிலும், வேலூரிலிருந்து சுமார் 28 கி.மீ. தொலைவிலும் உள்ளது. வேலூரிலிருந்து போளூர் செல்லும் சாலையில் சுமார் 23 கி.மீ. தொலைவி லிருந்து இவ்வூருக்கு கிழக்கு பக்கம் செல்ல வேண்டும். அங்கிருந்து சுமார் 5 கி.மீ. தொலைவு

உள்ளது. வேலூரிலிருந்தும், ஆரணியிலிருந்தும் பேருந்து வசதி உண்டு.

இவ்வூரில் ஒரே இனத்தைச் சேர்ந்தவர்கள் வாழ்கின்றனர். ஒன்று + புரம், ஒன்றுபுரம் என பெயர் ஏற்பட்டு ஒண்ணுபுரம் என மருவியது.

இங்குள்ளவர்களுக்குக் குலதெய்வம் சௌடாம்பிகை. அந்த அம்மனுக்கு இங்கு சிறந்த முறையில், சிற்ப வேலைப்பாடுகளுடன் கோயில் கட்டப்பட்டுள்ளது.

இவ்வூரின் முக்கியமான சிறப்பு இங்கு எவரும் வரதட்சணை வாங்காமையாகும். அது மட்டுமல்ல திருமணச் செலவை பிள்ளை வீட்டார்தான் ஏற்க வேண்டும். இவ்வூரில் உள்ளோர் ஒண்ணுபுரம் தேவாங்கபுரம், துருகம் ஆகிய ஊர்களில் மட்டுமே திருமண உறவை ஏற்படுத்திக் கொண்டிருந்தனர். இப்பொழுது ஒரு சிலர் மற்ற ஊர்களுக்கும் சென்று திருமண உறவை ஏற்படுத்திக் கொண்டு வருகின்றனர்.

இவ்வூரில் அருள்மிகு சௌடாம்பிகை கோயில் மட்டுமல்ல. அன்னை காமாட்சி உடனுறை ஏகாம்பர ஈசுவரர் கோயிலும் உண்டு. இக்கோயில் நாகநதிக்கரையில் அமைந்திருப்பது சிறப்பான ஒன்று ஆகும். இவ்விரு கோயில்களிலும் அடிக்கடி திருவிழாக்கள் நடைபெற்று வருகின்றன.

அன்னை பார்வதி காமாட்சியாக கைலாயத்தி லிருந்து புறப்பட்டு காஞ்சிபுரம் செல்வதற்கு முன் ஒண்ணுபுரம் நாகநதிக்கரையில் தவமிருந்து இறைவனை வழிபட்டதாக சொல்கின்றனர். குபேரனும் இங்கு வந்து ஏகாம்பரேசுவரரை வழிபட்டதாகச் சொல்கின்றனர். ஆகவேதான் இவ்வூரில் உள்ளவர்கள் சகல சம்பத்துடன் வாழ்கின்றனர் என்பர்.

அண்மையில்தான் இக்கோயில் புதுப்பிக்கப் பட்டு குடமுழுக்கு (கும்பாபிஷேகம்) நடைபெற்றது.

இவ்வூரில் முக்கியமான தொழில் பட்டு நெசவு ஆகும். இங்கு தயாரிக்கப்படும் பட்டு சேலைகள் தமிழ்நாட்டில் மட்டுமலல கேரளா, கர்நாடகம் முதலிய வெளி மாநிலங்களுக்கும் அனுப்பப்படு கின்றன.

இங்கு லுங்கிகளும் தயாரிக்கப்பட்டு மற்ற இடங்களுக்கு அனுப்பப்படுகின்றன.

இவ்வூர் மக்கள் இறைபக்தியில் மட்டுமல்ல இலக்கியத்திலும் ஆர்வமுடையவர்கள். அடிக்கடி இங்கு கருத்தரங்கு, பட்டிமன்றம் முதலியன நடை பெற்று வருகின்றன. அதனை அனைவரும் கேட்டு மகிழ்கின்றனர்.

- எம். ஆர். ருத்ரைய்ய சுவாமி, துருகம்.

- பா. பத்மநாபன், ஒண்ணுபுரம்.

*** கண்ணமங்கலம் :**

இவ்வூர் ஆரணி வட்டம், மேற்கு ஆரணி ஒன்றியத்தைச் சேர்ந்தது. இவ்வூர் வேலூர் போளூர் சாலையில் வேலூரிலிருந்து சுமார் 21 கி. மீ. தொலைவிலும், ஆரணியிலிருந்து சுமார் 16 கி.மீ. தொலைவிலும் உள்ளது. இவ்வூர் வழியாக பல முக்கிய ஊர்களுக்கு பேருந்து வசதி உண்டு. இவ்வூரிலிருந்து ஆரணிக்கும், வேலூருக்கும் நகரப் பேருந்து வசதி உண்டு.

கண்ணமங்கலத்திற்கு வடக்கே கோட்டை மலை என்ற மலை ஒன்று உள்ளது. இம்மலை அடிவாரத்தில் கன்னிகோயில் உள்ளது. இதன் கிளை கோயில் முக்கியமான சாலையில் அமைக்கப் பட்டுள்ளது. இக்கன்னிகோயிலின் நினைவாகத் தான் குழந்தைகளுக்கு கன்னியப்பன் என்றும் கன்னியம்மாள் என்றும் பெயர் வைக்கப்படுகிறது.

இந்த ஆலயத்தின் அருகில் ஊர் அமைந்துள்ள தால் கன்னிமங்கலம் என அழைக்கப்பட்டது. மங்கலம் என்பது பல்லவர் காலத்தில் ஊர்களுக்கு வழங்கப்பட்ட பெயர். கன்னி+மங்கலம் : கன்னிமங்கலம் . நாளடைவில் இவ்வூர் கண்ண மங்கலம் என அழைக்கப்பட்டது.

இவ்வூர் நாகநதியின் தென்கரையில் அமைந் துள்ளது. மிகவும் வளமை மிக்க ஊர்.

இவ்வூரின் நடுநாயகமாக பெருமாள் கோயில் உள்ளது. இது மிகவும் பழமை வாய்ந்த கோயிலாகும். இக்கோயில் இலட்சுமி நரசிம்ம பெருமாள் கோயில் என அழைக்கப்படுகிறது.

ஊரின் வடகிழக்கில் பர்வதவர்தினி உடனுறை இராமநாத ஈஸ்வரர் கோயில் உள்ளது. இதுவும் மிகப் பழமையான கோயில்.

இக்கோயிலின் எதிரே ஒரு பெரிய லிங்கம் உள்ளது. இது கம்பி, ஜல்லி, சிமெண்ட் கொண்டு கட்டப்பட்டுள்ளது. சுமார் 6 அடி உயரம் தூண் களின் மீது அடிபீடம், ஆவுடையார், லிங்கம் என முப்பகுதிகளாக அமைக்கப்பட்டுள்ளது. இதன் உயரம் சுமார் 64 அடி இதன் சுற்றளவு சுமார் 80 அடி.

தமிழ்நாட்டிலேயே இதுதான் பெரிய லிங்கம் என சொல்லப்படுகி றது. என்ன காரணத்தாலோ இது காறும் இந்த லிங்கம் வழிபாடற்று இருக்கிறது.

- வாழியூர் வே. இராசவேலன்.

கண்பார்வையற்ற தாய் தந்தையரை ஒரு சிறுவன் இரு கூடைகளில் வைத்து தராசு போல் அமைத்து (காவடி போல என்றும் சொல்லலாம்). தோளில் வைத்து ஊர் ஊராகச் சுற்றி வந்தான். அச்சிறுவன் நாகநதியைக்கடந்து வந்தான்.இருட்டாகி விட்டது. அங்கிருந்த ஈஸ்வரன் கோயிலில் தங்கினான். விடிந்தது தாய் தந்தையர் இருவருக்கும்

கண் தெரிந்தது. இவ்வூரில் வந்ததும் கண்பார்வை வந்ததால் கண்ட மங்கலம் என வழங்கப்பட்டு இப்பொழுது கண்ணமங்கலம் என அழைக்கப் படுகிறது.

- கோ. ஜெகதீசன், அழகு சேனை.

*** கிளியாத்தூர் :**

இவ்வூர் செய்யாரிலிருந்து காஞ்சிபுரம் செல் லும் சாலையில் உள்ளது. செய்யாரிலிருந்து சுமார் 5 கி.மீ. தொலைவில் உள்ளது. இவ்வூர் செய்யார் ஒன்றியத்தைச் சேர்ந்தது.

கிளியாற்றின் கரையில் அமைந்துள்ளதால் கிளியாற்றூர் என அழைக்கப்பட்டு கிளியாத்தூர் என அழைக்கப்படுகிறது.

- த. கோ. சம்பந்தம், செய்யாறு.

*** குண்ணகம்பூண்டி :**

இவ்வூர் தெள்ளாறு ஒன்றியத்தைச் சேர்ந்தது. வந்தவாசி வட்டத்தில் வந்தவாசியிலிருந்து செஞ்சி போகும் வழியில் உள்ளது.

குன்றுகள் சூழ்ந்த ஊர் ஆதலால் குன்றகம் பூண்டி என அழைக்கப்பட்டது. பின்னர் குண்ணகம் பூண்டி என மருவி அழைக்கப்படுகிறது.

இங்கு வேம்பியம்மன் கோயில் உள்ளது. இக்கோயிலில் ஆடிமாதம் ஐந்து நாட்கள் திருவிழா நடக்கும். கடைசிநாள் தேர்த்திருவிழா நடக்கிறது. தேரை மக்கள் தோளில் சுமந்து சென்று மலை அடிவாரத்தில் உள்ள செங்காத்தாள் அம்மன் இருக்கும் இடத்தில் வைப்பர். அங்கு பூசை செய்து தேரை எடுத்து வருவார்கள்.

ஆடிமாதம் ஸ்ரீ சிவசுப்பிரமணியர் ஆலயத்தில் ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் குருபூசையும் மறுநாள் முருகனுக்குக் காவடி எடுத்தலும் சிறப்பாக நடைபெறும்.

கிராமத்திற்கு மேற்குப் பக்கம் சிறிய குன்று ஒன்று உள்ளது. அது பஞ்சபாண்டவர் மலை என அழைக்கப்படுகிறது. அங்கு சில கால் சுவடு அடையாளம் உள்ளது. அது பஞ்சபாண்டவர் காலடிகள் எனக் கூறுகின்றனர்.

இங்குள்ள மக்களின் முக்கிய தொழில் விவசாயமும் கைத்தறி நெசவும் ஆகும்.

**- வி. த. சுப்பிரமணியன், குண்ணகம்பூண்டி**

*** குயப்பட்டு :**

இவ்வூர் வந்தவாசி வட்டம், வந்தவாசி ஒன்றியத்தைச் சேர்ந்தது. வந்தவாசியின் வடகிழக்கில்

சுமார் 8 கி.மீ. தொலைவில் உள்ளது. இப்பொழுது குசப்பட்டு என வழங்குகிறது.

இங்கு மண்பாண்டம் செய்யும் குலாளர் அதிகமாக உள்ளனர். ஆகவே இப்பெயர் பெற்றது.

- **இரா. வ. கமலக்கண்ணன்,** வந்தவாசி.

*** கூழப்பந்தல் :**

இவ்வூர் செய்யாறு வட்டத்தில் உள்ளது. காஞ்சிபுரத்திலிருந்து வந்தவாசிக்குச் செல்லும் வழியில் காஞ்சிபுரத்திலிருந்து வடக்கே 18 கி.மீ. தொலைவில் உள்ளது.

கூழம் - எள், திலம், திலதம். எள் அதிகமாக விளைந்த ஊரானதால் இப்பெயர் பெற்றிருக்கலாம். கூழன் ஒருவகைப் பலாமரம். அத்தகைய பலா மரங்கள் மிகுந்து இருந்ததால் இப்பெயர் பெற்றிருக்க லாம். பந்தல் என்றால் ஓடும் சாலை, பந்தர், விதானம் என்று பல பொருள்கள் உண்டு. பல்லவர்களின் தலைநகரம் காஞ்சிபுரம். பிற்காலச் சோழர்களின் தலைநகரங்கள் பழையாறை, கங்கைகொண்ட சோழபுரம்.

காஞ்சிபுரத்திலிருந்து கங்கை கொண்ட சோழபுரம், பழையாறைக்கு இவ்வூர் வழியாகச் சாலை ஓடியது. (சென்றது) ஆகவே கூழப்பந்தல் என பெயர் வந்தது.

முதலாம் இராசேந்திரனின் சிறப்புப் பெயர் களுள் ஒன்று விக்கிரமசோழன். இவன் கி.பி. 1012 முதல் 1044 வரை அரசாண்டான். இவன் வட ஆர்க்காடு மாவட்டம் (இப்பொழுது வேலூர் மாவட்டம்) பிரம்மதேசத்தில் இறைவனடி சேர்ந்தான்.

இவனுடைய ஆட்சிக் காலத்தில் இவ்வூர் விக்கிரமசோழபுரம் எனப் பெயர் பெற்றிருந்தது. ஜெயங்கொண்ட சோழ மண்டலத்துக் காழியூர்க் கோட்டத்து பாகூர் நாட்டு நகர் விக்கிரமச் சோழபுரம் என்று கல்வெட்டு கூறுகிறது.

இவ்வரசன் (இராசேந்திரன்) தென் ஆர்க்காடு மாவட்டத்தில் கங்கை கண்ட சோழபுரம் உருவாக்கி னான். அங்கு 'கங்கை கொண்ட சோழிச்சுரம்' என்னும் கோயிலைக் கட்டினான்.

கூழப்பந்தலிலும் இவன், 'கங்கை கொண்ட சோழீச்சுரம்' என்ற சிவன் கோயிலைக் கட்டினான்.

இவ்வூருக்குத் தெற்கே ஒரு கி.மீ. தொலைவில் உள்ள வெள்ளாமலை கிராமத்தில் 'கோட்டக்கரை' என்ற ஒரு மேடு காணப்படுகிறது. அங்கு கோட்டை இருந்ததற்கான அடையாளம் காணப்படுகிறது. இக்கோட்டக்கரைக்கு அருகில் ஆயிரத்து இருநூறு ஆண்டுகளுக்கு முற்பட்ட அழகிய புத்தர் சிலை கிடைத்து உள்ளது.

இவ்வூரின் மேற்கே திருமால் கோயில் இருந்தது. பெருமாளின் பெயர் பேசும் பெருமாள். இரண்டு மீட்டர் உயரமுள்ள சீதேவி, பூதேவி இருவருடன் இரண்டே கால் மீட்டர் உயரமுள்ள இப்பெருமாள் நிற்பது அழகாக உள்ளது.

பெருமாள் முன்பு நின்று நோக்கினால் பெருமாள் நம்மை நோக்கி புன்முறுவலுடன் நம்மிடம் பேசுவது போல அமைந்திருப்பது அதிசயமாக உள்ளது. இக்கோயில் இப்பொழுது அடியோடு அழிவுற்ற நிலையில் உள்ளது. கங்கை கொண்ட சோழீச்சுரம் கோயில் கட்டிய காலத்தி லேயே இப்பெருமாள் கோயிலும் கட்டப்பட்டது. தற்சமயம் சிறிய ஊராக உள்ள கூழம்பந்தல் சோழர்களின் ஆட்சிக் காலத்தில் பெரிய நகரமாக இருந்தது. இவ்வூர் இப்பொழுது கூழமந்தல் என வழங்கப்படுகிறது.

கி.பி. 1250ல் தெலுங்கு சோழ மன்னன் விஜய கண்டகோபாலன் இப்பெருமாளை வணங்கினான். இப்பெருமாளுடன் பேசினான் என்பர். சூரியன் சந்திரன்' உள்ளவரை பூஜை செய்ய ஆண்டுதோறும் 11 கலச நெல்லும் பொற்காசும் வழங்க ஆணையிட்டான் என இங்குள்ள ஒரு கல்வெட்டு கூறுகிறது.

**- வாழியூர் வே. இராசவேலன்.**

இவ்வூர் கூழைப்பந்தல் என வழங்கப்பட்டதாகக் கூறுவர். படையில் முன்படை, பின்படை என உள்ளது. முன்படைக்கு தூசி என்றும், பின்படைக்கு கூழை என்றும் பொருள் கூறுவர். காஞ்சிபுரத்திலிருந்து தெள்ளாறுக்குப் படைசென்றபோது பின்படை நின்ற இடம் இது. பந்தல் படையின் பகுதியாகும். கூழைப்பந்தல் - கூழப்பந்தல்.

**- த.கோ. சம்பந்தம்,** செய்யாறு.

*** கொருக்கை :**

இவ்வூர் செய்யாரிலிருந்து ஆரணி செல்லும் வழியில் உள்ளது. செய்யாரிலிருந்து ஆரணிக்கு மூன்று வழிகள் உள்ளன. ஒன்று மாம்பாக்கம் வழி. இரண்டு பாராசூர் வாழ்குடைவழி. மூன்றாவது கொருக்கை வழி.

இவ்வூர் செய்யாரிலிருந்து சுமாா 13 கி.மீ. தொலைவிலும், ஆரணியிலிருந்து சுமார் 15 கி.மீ. தொலைவிலும் உள்ளது. முன்னாள் சட்டமன்ற செயலாளராகவும், கேரள மாநில கவர்னராகவும் இருந்த அமரர் இராமச்சந்திரன் இவ்வூரைச் சேர்ந்தவர் என்பது குறிப்பிடத்தக்கது. அந்நாள் மாவட்டக்கழகத்தின் செயலாளராக (District board Secretary) இருந்த அமரர் துரைசாமி நாயுடு இவ்வூரைச் சேர்ந்தவர்.

இங்குள்ளவர்கள் ஏதாவது துன்பம் வந்தால் ஒரு கையனை நினை. ஒரு கையனை நினை என்று சொல்லிக் கொண்டிருப்பார்களாம். ஒருக்கை, ஒருக்கை எனச் சொல்லிச் சொல்லி கொருக்கை என வந்தது என்பர்.

- அ. அமிர்தலிங்கம், மொடையூர்.



**கொளத்தூர் :**

இவ்வூர் ஆரணி வட்டம், மேற்கு ஆரணி ஒன்றியத்தைச் சேர்ந்தது. கண்ணமங்கலத்திலிருந்து குப்பம், படைவீடு சாலையில் சுமார் 2 கி.மீ. தொலைவில் உள்ளது. வேலூரிலிருந்தும், ஆரணியிலிருந்தும் பேருந்து வசதி உண்டு.

ஊருக்கு ஒரு குளம் என்பது இயல்பு. இவ்வூரில் எட்டு குளங்கள் உள்ளன.

எட்டு குளங்களுக்கு இடையில் இவ்வூர் இருப்பதால் கொளத்தூர் என அழைக்கப்படுகிறது.

இவ்வூரின் வடமேற்கே ஏரிக்கரையின் அருகில் காமாட்சி அம்மன் உடனுறை ஏகாம்பரேசுவரர் கோயில் உள்ளது. இங்கு ஐப்பசி மாதம் அன்னாபிஷேகம் நடைபெறுகிறது.

ஊரின் நடுநாயகமாக பெருமாள் கோயில் உள்ளது. இவை இரண்டும் மிகவும் பழமை வாய்ந்த கோயில்கள் ஆகும். கொளத்தூருக்கு வடக்கே ஈடியாத் தோப்பு என்று ஒரு இடம் உள்ளது. அங்குள்ள மலை மீது பண்டரிநாதர் கோயில் உள்ளது. அதுவும் பழமை வாய்ந்த கோயிலாகும்.

- வ. செந்தமிழ்ச் செல்வன், கண்ணமங்கலம்.

*** கோவிலூர் :**

செய்யாறு வட்டம் அனக்காவூர் ஒன்றியத்தைச் சேர்ந்தது இவ்வூர். செய்யாறின் வடகரையில் உள்ளது. செய்யாரிலிருந்து சுமார் 11 கி.மீ. தொலைவில் உள்ளது.செய்யாரிலிருந்து தவசி இருங்கல் - செங்காடு வழியாக பேருந்தில் இவ்வூரை அடையலாம்.

நல்ல வயல் வளம் உள்ள ஊர் இது. கோயில்கள் சார்ந்த ஊர் இது. மிகுந்த பக்தி நலம் உள்ள ஊர். கோயில் பெயரால் கோயிலூர் என்றும், கோவிலூர் என்றும் வழங்கப்படுகிறது.

- த.கோ. சம்பந்தம், செய்யார்.

*** சளுக்கை :**

இவ்வூர் வந்தவாசி வட்டம், வந்தவாசி ஒன்றியத்தைச் சேர்ந்தது. வந்தவாசியிலிருந்து வடகிழக்கில் சுமார் 5 கி.மீ. தொலைவில் உள்ளது.

இது சாளுக்கியரோடு தொடர்புடைய ஊரான தால் சளுக்கை எனப் பெயர் பெற்றது என்பர்.

- இரா. வ. கமலக்கண்ணன், வந்தவாசி



*** சம்புவராய நல்லூர் :**

ஆரணியிலிருந்து நடுக்குப்பம் வழியாக படவேடு செல்லும் சாலையில் நடுக்குப்பத்தி லிருந்து வடக்கே சுமார் 1 கி.மீ. தொலைவில் கமண்டல நதிக்கரையில் இவ்வூர் உள்ளது.

இவ்வூர் இராசகம்பீர சம்புவராய மன்னரால் உருவாக்கப்பட்டது. பிராமணர்களுக்குக் கொடை யாக வழங்கப்பட்டது.

இது ஆரணி வட்டம், மேற்கு ஆரணி ஒன்றியத்தைச் சேர்ந்தது.

- சரவேல், வாழியூர்.

*** சித்தாத்தூர் :**

செய்யாரிலிருந்து கிழக்கில் சுமார் 10 கி.மீ. தொலைவில் இவ்வூர் உள்ளது. இவ்வூர் செய்யாறு வட்டம் வெம்பாக்கம் ஒன்றியத்தைச் சேர்ந்தது.

சேயாற்றின் கிளை ஆறு சிற்றாற்றங்கரையில் உள்ளது இவ்வூர். சிற்றாற்றூர் என்பது மருவி சித்தாத்தூர் என பெயர் பெற்றது.

- த.கோ. சம்பந்தம், செய்யாறு.

*** சீஷமங்கலம் :**

இவ்வூர் செய்யார் வட்டம், செய்யார் ஒன்றியத்தைச் சேர்ந்தது. ஆரணிக்கு கிழக்கே சுமார் 9 கி.மீ. தொலைவில் உள்ளது.

ஸ்ரீமன் நாராயணனுக்கு ஆலயம் அமைத்து உண்டாக்கப்பட்ட ஊர் இது. ஸ்ரீமன் நாராயண மங்கலம் எனப்பட்டு. பின்னர் மருவி ஸ்ரீ சீமங்கலம் எனப்பட்டது. பின்னர் அதுவே சீசமங்கலம் என அழைக்கப்படுகிறது என்பர்.

**- வாழியூர் வளவன்.**

இவ்வூர் அம்மையப்ப சீயன் என்னும் பல்லவனின் பெயரால் சீயன் மங்கலம் என்று வழங்கப்பட்டது. பின்னர் மருவி சீசமங்கலம் எனப்படுகிறது.

- மு. கண்ணன், செய்யாறு.

*** சு. தாங்கல் :**

இவ்வூர் வாழியூருக்கு கிழக்கில் சுமார் 1 கி.மீ. தொலைவில் உள்ளது. இவ்வூர் ஆரணி வட்டம் மேற்கு ஆரணி ஒன்றியத்தைச் சார்ந்தது. ஆரணி ஜாகீரில் சுரோத்ரியம் என்பவர் முக்கிய பொறுப்பில் இருந்தார். அவர் பெயரால் ஏற்பட்டதே இவ்வூர்.

சுரோத்திரியம் தாங்கல் என்பது சு. தாங்கல் எனச் சுருங்கியது.

- மா. ஜானகிராமன், சு. தாங்கல்.

*** செங்காடு :**

இவ்வூர் செய்யாறு வட்டம் அனக்காவூர் ஒன்றியத்தைச் சேர்ந்தது. செய்யாரிலிருந்து தெற்கே சுமார் 8 கி.மீ. தொலைவில் உள்ளது.

இது வளம் நிறைந்த ஊர், செழுமையான ஊர் எனவே செங்காடு என அழைக்கப்படுகிறது.

- த.கோ. சம்பந்தம், செய்யாறு.

*** செட்டித்தாங்கல் :**

இவ்வூர் ஆரணி வட்டம், ஆரணி ஒன்றியத்தைச் சேர்ந்தது. ஆரணியிலிருந்து சுமார் 15 கி.மீ, வேலூரிலிருந்து சுமார் 30 கி.மீட்டர் தொலைவில் உள்ளது. ஆரணியிலிருந்து கண்ணமங்கலம், வாழியூர் கூட்ரோட் ஐயம் பாளையம் கூட்ரோட், காந்திநகர் வழியாக இவ்வூருக்கு பேருந்து உண்டு. வேலூரிலிருந்து கணியம்பாடி, கண்ணமங்கலம், வாழியூர் கூட்ரோட், ஐய்யம்பாளையம், பட்டம் வழியாக இவ்வூருக்கு பேருந்து உண்டு. அடிக்கடி ஆரணிக்கு சிற்றுந்து களும் போகும்.

இன்றைய செய்யாறு கோட்டம் போல் பல்குன்ற கோட்டமும். ஆரணி தாலுக்கா போல் தச்சூர் முருகமங்கலம் இருந்துள்ளது.

திருமலை நாயக்கரின் சிற்றரசன் மல்லப்ப நாயக்கன். இவன் தச்சூர் நாட்டை ஆண்டபோது சந்தவாசல் கங்கையம்மன் கோயிலுக்கும், பெருமாள் கோயிலுக்கும் விளக்கேற்றி வைக்க செல்லக வீரப்பன் தாங்கல் என்ற கிராமத்தை தானம் விட்ட செய்தி கல்வெட்டில் உள்ளது.

செட்டித்தாங்கல் என்ற இன்றைய சேதரம் பட்டே செல்லக வீரப்பன் தாங்கல் என அறியலாம்.

- வ. செந்தமிழ்ச் செல்வன்,
கண்ணமங்கலம்.

*** செப்டாங்குளம் :**

இவ்வூர் வந்தவாசி வட்டம், பெரணமல்லூர் ஒன்றியத்தைச் சேர்ந்தது. பெரணமல்லூரிலிருந்து தெற்கே சுமார் 4 கி.மீ. தொலைவில் உள்ளது.

சப்தரிஷி குளம் என்பதே இவ்வாறு மருவியது என்பர்.

- இரா. வ. கமலக்கண்ணன், வந்தவாசி.

*** செய்யாற்றை வென்றான் :**

இவ்வூர் செய்யார் வட்டம் செய்யார் ஒன்றியத்தைச் சேர்ந்தது. செய்யாரிலிருந்து மேற்கே சுமார் 6 கி.மீ. தொலைவில் உள்ளது. பாராசூர் கூட்டுச் சாலைக்கும் செய்யாறுக்கும் இடையில் உள்ளது. பேருந்து வசதி உண்டு.

தெள்ளாற்றில் வென்றான் என்ற பெயர் நந்திவர்மனுக்கு நிலைத்தது போல, செய்யாற்றை வென்றான் என்ற பெயர் ஒருவருக்கு நிலைத்திருக்கிறது. அவர் யார்? அவர் சைவத்தைப் பரப்ப வந்த சமயக்குரவர்களுள் ஒருவரான திருஞான சம்பந்தர். செய்யாற்றை வென்றான் என்றே இவர் பெயரால் ஊர் ஏற்பட்டுள்ளது. அதுதான் இவ்வூர்.

சம்பந்தர் மதுரையில் சமணர்களிடம் அனல் வாதம், புனல் வாதம் நிகழ்த்தி வெற்றி கண்டார். அங்கு சைவ சமயத்தை நிலைக்கச் செய்து விட்டுத் திரும்பினார். பாண்டிய நாடு, சோழநாடு எல்லாவற்றையும் சுற்றி விட்டு தொண்டை நாட்டிலே உள்ள திருவோத்தூர் என்னும் தலத்துக்கு (இன்று செய்யார் என வழங்கப்படுகிறது.) வந்தார். இங்கேயும் சமணர்கள் ஆதிக்கம் மிகுந்திருந்தது.

தென்திசையில் இருந்து வந்த சம்பந்தர் சேயாற்றின் தென்கரையில் இருந்தே வேதபுரீஸ்வரர் கோபுரத்தையும் மதிலையும் தரிசித்தார். அங்கிருந்த மடத்தில் தங்கினார்.

மதுரையில் ஞானசம்பந்தர் நிகழ்த்தியவை களைக் கேட்டிருந்த சமணர்கள் அவர் மீது வெறுப்புடன் இருந்தனர். இங்கேயும் அவரை அழிக்க, ஒரு வேள்வி செய்து அதிலிருந்து எழுந்த கொடிய பாம்பை அவர் மீது ஏவினர். சம்பந்தரோ பாம்பை சமணர்களது, 'வேந்தன் வாழி இஞ்சி சூழ் திருமனைக்கே ஏகென்று' திசை திருப்பினார்.

அரசன் இத்துன்பத்தினால் வருந்தி சம்பந்தரை அணுகினார். அவர் இறைவனை வேண்ட இறைவன் பாம்பாட்டியாக வந்து மகுடி ஊதி அப்பாம்பைப் பிடித்துக் கொண்டு கோயிலுக்குள் சென்று விட்டார்.

சமணர் பகை குறைந்தபாடில்லை. வளர்ந்தது, சம்பந்தரை புனல்வாதத்துக்கு அழைத்தனர். அவரும் இணங்கினார். சமணர்கள் எழுதியிட்ட ஓலையைச் செய்யாற்று வெள்ளம் அடித்துக் கொண்டு சென்று விட்டது.

சம்பந்தர் பாடிய பதிகத்தில் ஒரு பாட்டை ஏட்டில் எழுதி ஆற்றில் இட அது நீரைக் கிழித்துக் கொண்டு சென்று ஒரு பழைய பதியை அடைந்தது.

இவ்வாறு ஆற்று வெள்ளத்தில் ஏடு எதிர் சென்று நின்று தங்கின இடமே அன்று முதல் சேயாற்றில் வென்றான் - செய்யாற்றை வென்றான் என்று அவ்விடத்திற்குப் பெயராயிற்று.

- வாழியூர் வே. இராசவேலன்.
- இரா. வ. கமலக்கண்ணன், வந்தவாசி.
- த.கோ. சம்பந்தம், செய்யாறு.

*** சோகத்தூர் :**

இவ்வூர் வந்தவாசி வட்டம், தெள்ளார் ஒன்றியத்தில் உள்ளது. வந்தவாசியிலிருந்து தென் கிழக்கில் சுமார் 8 கி.மீ. தொலைவில் உள்ளது.

இவ்வூர் சோகத்தைப் போக்குகிறது. ஆகவே சோகத்தூர் எனப் பெயர் வந்தது. எப்படி! இவ்வூரில் அருள்மிகு நரசிம்மஸ்வாமி கோயில் உள்ளது. அந்த இறைவனிடம் வந்து கசிந்துருகி, கண்ணீர் மல்கி நம்முடைய துயரங்களை, சோகங்களைக் கூறினால் அவ்விறைவன் நம்முடைய சோகத்தைப் போக்குவான்.

- *இரா. வ. கமலக்கண்ணன்*, வந்தவாசி.

*** சோமந்தாங்கல் :**

வாழியூருக்கு கிழக்கிலுள்ள ஊர் சோமந் தாங்கல் ஆகும். வேலூரிலிருந்து போளூர் செல்லும் வழியில் காந்திநகர் என்ற நிறுத்தத்தில் இறங்கி மேற்கே செல்ல வேண்டும். அங்கிருந்து சுமார் 2 கி.மீ. தொலைவில் இவ்வூர் உள்ளது.

சம்புவராயரை விசயநகர மன்னன், கம்பன் என்பவன் தோற்கடித்தான். அவனுடைய (கம்பனு டைய) படைத்தலைவன் பெயர். சோமய தண்ட நாயக்கன் என்பதாகும். அவனுடைய பெயரால் ஏற்பட்டதே சோமந்தாங்கல் என்ற பெயருடைய இவ்வூர் ஆகும்.

- *சரவேல்*, வாழியூர்.

*** தண்டரை :**

இவ்வூர் செய்யார் வட்டம், செய்யார் ஒன்றியத்தில் உள்ளது. செய்யாரிலிருந்து வடமேற்கில் சுமார் 5 கி.மீ. தொலைவில் தண்டரை என்ற ஊர் உள்ளது. ஆரணியிலிருந்து செய்யாறு போகும் வழியில் இவ்வூர் உள்ளது.

இவ்வூரில் சோலைகள் மிகுந்திருந்ததால் தண்டலை என பெயர் வந்தது. அது மருவி தண்டரை என்று ஆயிற்று. 'தண்டலை மயில்கள் ஆட' என்பான் கம்பன்.

**- இரா. வ. கமலக்கண்ணன், வந்தவாசி.**

ஒரு காலத்தில் இவ்வூரில் பாரிசவாயுவிற்கு எண்ணெய் செய்து கொடுப்பார்கள். இங்கு வந்து எண்ணெய் வாங்கிச் சென்றவர்கள் பெரும்பாலும் நோய் நீங்கப் பெற்றதை கேள்விப்பட்டுள்ளேன்.

**- சரவேல், வாழியூர்.**

*** தழுதாழை :**

இவ்வூர் வந்தவாசி வட்டம், வந்தவாசி ஒன்றியத்தில் உள்ளது. வந்தவாசியிலிருந்து வடகிழக்கில் சுமார் 4 கி.மீ. தொலைவில் உள்ளது.

தழுக்குதல் என்றால் செழிப்பாக இருத்தல். இங்கு செழுமையான தாழை மரங்கள் மிகுதியாக இருப்பதால் தழுதாழை எனப் பெயர் பெற்றது. இப்பொழுது தழுதாளி என வழங்கப்படுகிறது.

- இரா. வ. கமலக்கண்ணன், வந்தவாசி.

*** திரக்கோல் :**

இவ்வூர் வந்தவாசி வட்டம், தெள்ளார் ஒன்றியத்தைச் சேர்ந்தது. வந்தவாசிக்கு சுமார் 13 கி.மீ. தொலைவில் உள்ளது. வந்தவாசியிலிருந்து பொன்னூருக்குப் போகும் வழியில் பொன்னூரி லிருந்து சுமார் 6 கி.மீ. தொலைவில் உள்ளது. தேசூரிலிருந்தும் இவ்வூருக்குச் செல்லலாம். தேசூரிலிருந்து வடகிழக்கில் சுமார் 30 கி.மீ.

இங்குள்ள குன்றின்மீது மூன்று குகைகளும் மூன்று ஜினாலயங்களும் உள்ளன. அக்கோயில்களின் அடியாகத் திருக்கோயில் என்னும் பெயர் அமைந்தது. அதுவே திரக்கோல் ஆயிற்று என்பர்.

- இராச. பேரரசு, வாழியூர்.

*** திருக்குரங்கணி முட்டம்:**

இவ்வூர் செய்யார் வட்டம், வெம்பாக்கம் ஒன்றியத்தில் உள்ளது. காஞ்சிபுரம் ஏகாம்பரேசு வரர் கோயிலிலிருந்து தெற்கே சுமார் 9 கி.மீ.

தொலைவிலும், தூசி என்ற ஊருக்குத் தென்கிழக்கே 2 கி.மீ. தொலைவிலும் உள்ளது.

குரங்காகிய வாலியும், அணிலும், காகமும் வழிபட்டதால் இப்பெயர் பெற்றது. இறைவன் திருநாமம் வாலி வழிபட்டதைக் காட்டும் சான்று. காக்கை மடு காக்கை வழிபட்டதைக் காட்டுவது.

குரங்கு வழிபட்டது வடக்கு பக்கமும், அணிலும் காகமும் வழிபட்டது தெற்குபக்கமுமாக கோயில் கட்டப்பட்டுள்ளது. இறைவனின் பெயர் வாலீஸ்வரர். இறைவியின் பெயர் இறையார் வளையம்மை.

இத்தலம் காளியூர் கோட்டத்து இருகழி நாட்டு மாவண்டூர்ப் பற்றத்துப் பல்லவபுரமான திருக்குரங்கணில் முட்டம் என்று குறிப்பிடப்படு கிறது. கடவுள் திருக்குரங்கணில் முட்டமுடைய நாயனார் என்றும், கொய்யாமலர் ஈசுவரதேவர் என்றும் கல்வெட்டில் குறிப்பிடப்பட்டுள்ளது.

இத்தலம் சம்பந்தரால் பாடப்பட்டது. அதில் ஒரு பாடல்.

*விழுநீர் மழுவாள் படைஅண்ணல் விளங்கும்*
*கழுநீர் குவளையம் மலர்க் கயல்பாயும்*
*கொழுநீர் வயல் சூழ்ந்த குரங்கு அணில் முட்டம்*
*தொழுநீர் மையர் தீதுறு துன்பம் இலரே. (1-31-1)*

கங்கையை அணிந்தவரும், மழுவேந்தியவரு மாகிய இறைவன் விளங்கும் இத்தலத்தைத்

தொழுபவர் துன்பம் இல்லாதவராவர் என்கிறது இப்பாடல்.

- வாழியூர் வே. இராசவேலன்.

* திருப்பனங்காடு :

இவ்வூர் திருவன் பார்த்தான் பனங்காட்டூர் என அழைக்கப்பட்டது. இப்பொழுது இது திருப்பனங்காடு என வழங்கப்படுகிறது.

திருக்கச்சி ஏகாம்பரத்துக்குத் தெற்கே 6 கி.மீ. உள்ள ஐயன் குளத்தை அடைந்து, அங்கிருந்து மேற்கே ஆர்க்காட்டுக்குப் போகும் வழியில் 6 கி.மீ. சென்று பின் வடக்கே 1 கி.மீ.சென்றால் இத்தலத்தை அடையலாம். வெண்பாக்கத்தை அடுத்து உள்ளது இவ்வூர்.

பனையைத் தலவிருட்சமாக உடையமையால் இப்பெயர் பெற்றது என்பர்.

பனங்காட்டின் இடையே பரமன் கோயில் கொண்டமையால் பனங்காட்டூர் எனப் பெயர் உண்டாயிற்று என்று ஒரு சிலர் கூறுவர். இப்பதியில் உள்ள பெருமானை,

விடையின்மேல் வருவானை
வேதத்தின் பொருளானை
அடையில்அன் புடையானை
யாவர்க்கும் அறிவொண்ணா

மடையில்வா ளைகள்பாயும்
வன்பார்த்தான் பனங்காட் டூர்ச்
சடையில்கங்கை தரித்தானைச்
சாராதார் சார்வென்னே.

என்று சுந்தரர் பாடுகிறார். இங்கு இரண்டு சந்நிதிகள் உள்ளன.

1. அகஸ்தியர் வழிபட்டது தெற்கிலுள்ளது.

இறைவர் - பனங்காட்டுநாதர், இறைவி - அமிர்தவள்ளி.

2. வடக்கில் உள்ளது புலஸ்தியர் வழிபட்டது.

இறைவன் - கிருபாநாதேஸ்வரர் - இறைவி - கிருபாநாயகி. கோயிலில் எதிரொலி கேட்கிறது இரண்டு பனைகள் உள்ளன.சேக்கிழார் இதனை,

செல்வம் மல்கு திருப்பனங்காட்
டூரில் செம்பொன் செழுஞ்சுடரை
அல்லல் அறுக்கும் அருமருந்தை
வணங்கி அன்புபொழி கண்ணீர்
மல்க நின்று, 'விடையின்மேல்
வருவான்' எனும் வண்தமிழ்ப்பதிகம்
நல்ல இசையினுடன் பாடிப்
போந்து புறம்பு நண்ணுவார்.

*- 3353*

என்று சுந்தரர் பாடியதைக் குறிப்பிடுவார்.

அங்கமைந்த பனைமரங்கள் சோழ மன்னர் களால் நன்கு பாதுகாக்கப்பட்ட. பச்சைப் பனை

களை வெட்டுவோர் தண்டணைக்கு ஆளாவார் என்ற அரசன் ஆணை திருப்பனங் காட்டுடையார் ஆலயத்துக்கு முன்னுள்ள கல்வெட்டில் எழுதப் பட்டுள்ளது.

**- வாழியூர் வே. இராசவேலன்.**

*** திருமால் பாடி :**

இவ்வூர் தேசூருக்கு தென்மேற்கில் சுமார் 2 கி.மீ. தொலைவில் உள்ளது. தேசூர் - சீயமங்கலம் - மஞ்சப்பட்டு - திருமால்பாடி. இவ்வூர் செய்யார் வட்டம் தெள்ளார் ஒன்றியத்தில் உள்ளது.

திருமால் பள்ளி கொண்டிருக்கும் மலை இங்கு உள்ளது. திரு+ஆய்பாடி என்பது திருமால்பாடி என்று மருவி இருக்கலாம். விக்கிரமச்சோழன் என்பவரால் புனர்நிர்மாணம் செய்யப்பட்டது. கி.பி. 1130-ல் குலோத்துங்க சோழன் I கி.பி.1140ல் சகலோக சக்கரவர்த்தி சம்புவராயன், கி.பி. 1529ல் வீரசிங்கதேவரின் மகன் அச்சுததேவ மகாராயர் ஆகியோராலும் சீரமைக்கப்பட்டது.

**- இரா. வ. கமலக்கண்ணன்,** வந்தவாசி.



*** திருவோத்தூர் :**

இது செய்யாறு வட்டத்தைச் சேர்ந்தது. செய்யாற்றின் வடகரையில் உள்ளது. செய்யாற்றங்

கரையில் உள்ளதால் தற்போது மக்கள் வழக்கில் செய்யாறு என்றும் திருவோத்தூர் என்பது மருவி திருவத்தூர் என்றும், திருவத்திபுரம் என்றும் வழங்குகிறது.

இவ்வூர் காஞ்சிபுரத்திலிருந்து தென்மேற்கே 30 கி.மீ. தொலைவில் உள்ளது. புகைவண்டியில் செல்வதாயின் அச்சிறுபாக்கத்திலிருந்து செல்லலாம். அங்கிருந்து 30 கி.மீ. தொலைவு.

சிவபெருமான் வேதத்தின் பொருளை முனிவர்களுக்கும் தேவர்களுக்கும் அருளிச் செய்த தலம். ஆகவே திருவோத்தூர் எனப் பெயர் பெற்றது.

இது ஆண் பனை பெண் பனையான தலம். கோயில் வெளிச்சுற்றில் சில பனை மரங்கள் உள்ளன. கோயிலுள் ஆதிகேசவப் பெருமாள் சந்நிதி உள்ளது. சம்பந்தரால் பாடல் பெற்ற தலம். இறைவன் வேதநாதர் வேதபுரீஸ்வரர்; இறைவி - இளமுலை நாயகி.

செய்யாற்றின் கரையில் அத்தி மரங்கள் மண்டியிருந்ததால் திருவத்திபுரம் என்று பெயர் வந்ததாகவும் கூறுவர்.

- த.கோ. சம்பந்தம், செய்யார்.

இன்றைய சேயாறு அன்றைய திருவோத்தூர். பாலாற்றுக்கு ஒரு சேய் ஆறாக விளங்குவதே இதற்கு

சேயாறு என்ற பெயர் வரலாயிற்று. இத்தலத்தில் இருக்கும் இறைவன் வேதபுரீஸ்வரன். இறைவி இளமுலைநாயகி அது சரி! இங்கு இருக்கும் இறைவனை மட்டும் வேதபுரியான் என்று அழைக்கக் காரணம் என்ன!

வேதங்களை ஓதியுணர்ந்து பிறருக்கு உரைக்கும் முனிவர்களே வேதம் ஓதுதலை மறந்து விடுகிறார்கள். அம்முனிவர்கள் அனைவரும் இறைவனை வேண்ட இறைவனே வேதியர் உருவில் வந்தார். தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் வேதத்தை விரித்து ஓதினார். வேதம் ஓதுவித்த ஊர் ஒத்தூர். திருஅடைமொழி சேர்த்து திருவோத்தூர் என ஆயிற்று. இதனைக் காஞ்சி புராணம்,

**தத்துநீர் அலைபுரட்டும் சேயாற்றின்**
**தடங்கரைக் கண்இமையோர் கட்கும்**
**மெய்த்தவர்க்கும் ஓதுவித்தோம் ஆதலினால்**
**மேவு திருவோத்தூர் என்றும்**
**அத்தலத்தில் எமைத் தொழுவோர்**
**அருமறை நூல் முழுதுணர்ந்து வீடுசேர்வர்**
**(திருவேகம்பப்படலம் 80)**

என்கிறது.

அந்த மறைகளே விரும்பியபடி வேதஒலிகளை எல்லாம் சிவபெருமான் தனது உடுக்கையில் அடக்கி அந்த உடுக்கையை ஒலித்துக் கொண்டு வீர நடனம் ஆடிய தலமும் இதுவே என்று தலவரலாறு கூறுகிறது.

இத்தலத்தில் சம்பந்தர் பாடிய பதிகம் ஒன்று உள்ளது. ஆண் பனையைப் பெண்பனையாக்க 'பூந்தேர்ந்தாயன' என்னும் பதிகத்தைத் தொடங்கி பதினோராம் திருப்பாட்டில் 'குரும்பை ஆண்பனை ஈன்குலைஓத்தூர்' என்று திருக்கடைக்காப்பு பாடியபோது அப்பனைகள் எல்லாம் குலை தள்ளின.

சூரியன் பூசித்து ரதசப்தமியன்று இரதம் பெற்றது இத்தலம்! தரையைக் கீறி தீர்த்தமுண்டாகும் வேலாயுதத்தை முருகன் பெற்றது இத்தலம். பிருகு முனிவரின் சாபத்தை திருமால் போக்கிக் கொண்டது இத்தலம்! கல்யாண முனியின் சாபத்தால் மான் உருக்கொண்ட திருமகளின் சாபம் நீங்கப்பட்டது இத்தலம்! 'செழுநீர் நதி ஆரம் கொழியாக் கோமளம் வீசும் திருவோத்தூர்' என அருணகிரியாரால் பாடப்பட்டது இத்தலம்! 'நிலவு புகழ் திரு வோத்தூர்' என பட்டினத்தடிகளாலும், 'சீதமலர்மென் சோலை சூழ் திருவோத்தூர்' என சேக்கிழாராலும் பாடப்பட்டது இத்தலம்!

இங்குள்ள கோயிலைப் பராமரிக்க பல மன்னர்கள் நன்கொடைகள் அளித்துள்ளதைக் கல்வெட்டுகளால் அறியலாம்.

வீரசம்புவராயர் திருவத்திபுரம் கோயிலில் 40 நந்தா விளக்குகளைக் கொடையாக வழங்கினார். அவ்விளக்குகளுக்கு எண்ணெய் ஊற்றி எரிய வைக்க

திருவத்திபுரத்திற்கு அருகில் உள்ள வேதவினோத நல்லூர், சீராயம்பட்டு ஆகிய இரண்டு ஊர்களிலும் வரிகளால் கிடைக்கும் பணத்தைக் கொடையாக வழங்கினார்.

குலசேகர சம்புவராயர், செய்யாற்றை வென்றான் கிராமத்தில் இருந்து கிடைக்கும் வரிப்பணத்தைக் கொண்டு திருவோத்தூர் கோயிலில் பிராமணர்கள் வேதம் ஓதுவதற்கு ஏற்பாடு செய்தார்.

விக்கிரமசோழன் என்பவன், திருவோத்தூர் திருவீதிப் பணிக்கு திருவீதி மடப்புறம் அமைத்தான், நிலத்தைத் தானமாக அளித்தார் என அறிகிறோம்.

கைப்பிழையாக எய்த அம்பு ஒருவனை மாய்த்ததற்கு ஒத்தூர் இறைவனுக்கு அம்பை எய்தவன் விளக்கு ஏற்றுவதற்காக பசுக்களை தானமாக அளித்ததை அறிகிறோம்.

திருமால் ஆயர்பாடியில் கிருஷ்ணனாக வளர்ந்த காரணத்தால் ‘மன்றாடி ஆயர்பாடி நாட்டவர்’ என்போர் 18 தேசத்தவர் கூடி, பசுக்கள், எருமைகள், கன்றுகள் கொண்ட ஆனிறை தானமாக அளித்தார் என மாறவர்மன் சுந்தர பாண்டியன் கல்வெட்டால் அறிகிறோம்.

- வாழியூர் வே. இராசவேலன்

செய்யாருக்கு (நகருக்கு) அருகே ஆறு ஓடுகிறது. அதன் கரைகளில் சிவந்த மண் காணப்படுகிறது. அவ்வாறு ஓடி வரும்போது அதன் நீர் சிவப்பு நிறமாக உள்ளது. ஆகவே சேயாறு செம்மை யாறாகிறது. செம்மையாறு என வழங்கப்பட்ட அவ்வாறு சேயாறாயிற்று. அதன் அருகில் இருக்கும் ஊரும் சேயாறு ஆனது.

- **கோ. செல்வம்,** சென்னை.

பரமசிவன், பார்வதியின் மகன் முருகன், பார்வதி, பரமசிவன் சேயால் உருவாக்கப்பட்டது சேயாறு அதன் கரையில் இருக்கும் நகரம் (ஊர்) சேயாறு, செய்யாறு.

- **இரா. வ. கமலக்கண்ணன்,** வந்தவாசி.

ஆறு பாய்ந்து நிலம் உழுதல் செய்யப்பட்டு வளம் பெருகும். ஆற்றின் பெயரால் செய்யாறு சேயாறு எனப்படுகிறது.

சேய் - முருகன், சிவபூசை செய்வதற்காக ஜவ்வாது மலையை முருகன் வேலினால் கீறினான். அங்கு ஆறு உண்டாயிற்று. இவ்வாறு சேய் உண்டாக்கியதால் சேயாறு என்றும், அவ்வாற்றின் கரையில் உள்ளதால் செய்யாறு என்றும் பெயர் ஏற்பட்டது.

முன்னாள் அமைச்சரும், சபாநாயகருமாக இருந்த புலவர் கோவிந்தன் வாழ்ந்தது இவ்வூர் என்பது குறிப்பிடத்தக்கது.

- த. கோ. சம்பந்தம், செய்யாறு.

**தெள்ளாறு :**

இவ்வூர் வந்தவாசி வட்டம் தெள்ளாறு ஒன்றியத்தில் உள்ளது. ஆரணியிலிருந்து திண்டி வனம் போகும் சாலையில் தேசூருக்கு அருகில் சுமார் 8 கி.மீ. தொலைவிலும் வந்தவாசியிலிருந்து சுமார் 13 கி.மீ. தொலைவிலும் இவ்வூர் உள்ளது.

தெளிந்த ஆறு இங்கு ஓடியதால் இப்பெயர் பெற்றது என்பர். இன்று இங்கு ஆறு இல்லை.

நள்ளாறும் பழையாறும் கோட்டாற் றோடு
நலந்திகழும் நாளாறும் திருவை யாறும்
தெள்ளாறும் வளைகுளமும் தளிக்கு ளமு நல்ல
இடைக்குளமுந் திருக்குளத் தோடுஅஞ்சைக் களம்.

என அப்பரால் வைப்புத் தலமாகப் பாடப்பட்டது தெள்ளாறு.

பல்லவ மன்னனாகிய நந்திவர்மன் காலத்தில் தெள்ளாற்றில் நிகழ்ந்த பெரும்போர் நந்திக் கலம்பகத்தில் பாராட்டப்பட்டுள்ளது.

பாண்டியர், சோழர், சாளுக்கியர்களை நென்மலி, மண்ணைக்குடி, கருவூர் என்ற இடங் களில் நடந்த போர்களில் இவனே வென்றான் அப்படி வெற்றி பெற்று இருந்தும் கலம்பகத்தில் இவன் தெள்ளாற்றில் பகைவர்களை வென்றதையே சிறப்பாகக் கூறி யிருப்பது. "தெள்ளாறைநந்தி" 'தெள்ளாற்றில் வென்றான்' என்ற விருதுப் பெயர்களை இவன் பெற்றுள்ளான்.

இவனது கல்வியறிவு. வள்ளன்மை, போரில் வெல்லும் திறம் ஆகியவற்றை பாரதம் பாடிய பெருந்தேவனார்,

**வண்மையால், கல்வியால்**
**மாபலத்தால், ஆள்வினையால்**
**உண்மையால் பாராள்**
**உரிமையால் - திண்மையால்**
**தோள்வேந்தர் வான் ஏறத்**
**தெள்ளாற்றில் வென்றானோடு**
**யார்வேந்தர் ஏற்பார் எதிர்**

என்ற வெண்பாவினால் விளக்குகிறார்.

இவ்வாறு பல்லவ சரித்திரத்திலும், நந்திக் கலம்பகத்திலும் குறிக்கப்படும் ஊர், பழைய வெண்குன்றக் கோட்டத்தைச் சேர்ந்தது என்றும் , அங்குள்ள ஈசன்கோயில் திருமூலத்தானம் என்னும் பெயருடைய தென்றும் கல்வெட்டுகள் கூறுகின்றன.

**- வாழியூர் வே. இராசவேலன்.**

*** தெள்ளாரம்பட்டு :**

இவ்வூர் செய்யாறுவட்டம் பெரணமல்லூர் ஒன்றியத்தில் உள்ளது. வந்தவாசி ஆரணி சாலையில் ஆவணியாபுரம். நாராயணமங்கலம் தெள்ளாரம்பட்டு வரலாம். நாராயணமங்கலத்திலிருந்து சுமார் 5 கி.மீ. பெரணமல்லூரிலிருந்து இஞ்சிமேடு வந்து அங்கிருந்து சுமார் 6 கி.மீ. இவ்வூர் உள்ளது. சேத்துப்பட்டு பெரிய கொழப்பலூர் - தெள்ளாரம்பட்டு வரலாம். பெரிய கொழப்பலூரிலிருந்து சுமார் 6 கி.மீட்டரில் தெள்ளாரம்பட்டு உள்ளது. ஆரணியிலிருந்து சுமார் 25 கி.மீ. தொலைவில் இவ்வூர் உள்ளது.

பற்று என்பது நன்செய் நிலமாகும். ஆகவே நன்செய் நிலம் மிகுந்து இருப்பதால் இவ்வூரும் தெள்ளாறம்பட்டு என வழங்கலாயிற்று.

இவ்வூரில் தனபால் அடிகள் வாழ்ந்து வந்தார். சிறந்த சிவபக்தர், திருக்குறளைப் பரப்புவதில் மிகவும் ஆர்வம் உள்ளவராக இருந்தார். நல்ல பாடலாசிரியர். அவர் சமாதி இங்கு உள்ளது. அவரின் குருபூசை விழா தை மாதம் விசாகத்தில் தொடங்கி மூன்று நாட்கள் நடைபெறுகின்றன. அவருக்கு கோயில் கட்டி தனபால் ஈஸ்வரன் கோயில் என அதனை அழைக்கின்றனர்.

- இராச. பேரரசு.

*** தென்னாங்கூர் :**

இவ்வூர் வந்தவாசி வட்டத்தில் உள்ளது. வந்தவாசியில் இருந்து காஞ்சிபுரம் செல்லும் வழியில் வந்தவாசியிலிருந்து சுமார் 5 கி.மீ. தொலைவி லும், காஞ்சிபுரத்திலிருந்து சுமார் 3 கி.மீ. தொலைவிலும் உள்ளது.

இவ்வூர் அந்நாளில் 'தக்ஷிண ஹாலாஸ்யம்' என அழைக்கப்பட்டது. காரணம்! சப்தரிஷிகள் பெரிய யாகம் நடத்தியபோது அக்னியாகக் குண்டத் திலிருந்து யட்சன் ஒருவன் மீனாட்சியைக் குழந்தையாக எடுத்து வந்தான். அக்குழந்தையைப் பாண்டியனிடம் கொடுத்தான். பாண்டியன் அக்குழந்தையை மதுரைக்கு எடுத்துச் சென்று வளர்த்தான்.

ஆகவே இந்த ஊருக்கு சமஸ்கிருதத்தில் தக்ஷிண ஹாலாஸ்யம் என்று பெயர். இதன் தமிழ் ஆக்கமே தென்னாங்கூர் என்பதாகும்.

இங்கு ஸ்ரீரகுமாயி சமேத ஸ்ரீபாண்டுரங்க சுவாமி கோயில், ஸ்ரீமகாஷோடதசி அம்மன் கோயில் முதலிய கோயில்கள் உள்ளன.

இங்குள்ள ஸ்ரீ ரகுமாயி சமேத ஸ்ரீ பாண்டுரங்க சுவாமி கோயில் தோற்றம் ஒரிஸ்ஸா மாநிலத்தில் உள்ள பூரி ஜகந்நாத கோயில் வடிவில் உள்ளது.

இதன் பிரதான கோபுரம் திராவிட கட்டடக் கலையைச் சொல்கிறது.

இக்கோயிலை நிர்மாணித்தவர்சுவாமி ஹரிதாங்கிரி அவர்கள். இவர் தபோவனம் ஶ்ரீ ஞானந்தகிரிசுவாமிகளின் பிரதம சீடர்.

இவர் உலகம் முழுவதும் சென்று பஜனை செய்தும், பக்தி சொற்பொழிவு செய்தும் மக்களைக் கவர்ந்தார். அச்சொற்பொழிவின் மூலமும், பஜனையின் போதும் கிடைத்த நன்கொடையைக் கொண்டு தென்னாங் கூரில் இப்பெரிய கோயிலைக் கட்டினார்.

இம்மகான் 1994-ஆம் ஆண்டு செப்டம்பர் 4-ம் தேதி ருத்ர பியாகைக்கு அருகே உள்ள கோட்டீசுவரர் என்னும் இடத்தில் அலகானந்தாநதி யில் சமாதி ஆனார்.

**- வாழியூர் வே. இராசவேலன்.**

*** தேசூர் :**

இவ்வூர் வந்தவாசி வட்டம் வந்தவாசி ஒன்றியத்தில் உள்ளது. வந்தவாசிக்கு அடுத்த பெரிய ஊர் இது. வந்தவாசியிலிருந்து மழையூர் வழியாக சேத்துப்பட்டு போகும் வழியில் உள்ளது. மழையூரி லிருந்து 6 கி.மீ. தொலைவில் இவ்வூர் உள்ளது.

தேசு+ஊர் : தேசுஊர் அழகிய ஊர், புகழுடைய ஊர் என்று பெயர். ஆகவே தேசூர் என வழங்கப்படுகிறது.

- இரா. வ. கமலக்கண்ணன், வந்தவாசி.

*** தேவிகாபுரம் :**

இவ்வூர் ஆரணி வட்டம், மேற்கு ஆரணியைச் சார்ந்தது. போளூரிலிருந்து சேத்துப்பட்டு போகும் வழியில் சுமார் 10 கி.மீ. தொலைவில் உள்ளது. போளூரிலிருந்து சென்னை செல்லும் பேருந்துகள் இவ்வழியாகச் செல்கின்றன.

இவ்வூரில் கோயில் கொண்டுள்ள இறைவன் ஊரை ஒட்டியுள்ள சிறுகுன்றின் மீதும், இறைவி ஊரின் மையப் பகுதியில் குன்றின் கீழ்ப்புறமும் காட்சியளிக்கின்றனர்.

தேவியின் கோயில் கீழ்ப்புறம் அமைந்ததால் இவ்வூர் தேவி கீழ்புறம் என வழங்கி, இப்பொழுது தேவிகாபுரம் என அழைக்கப்படுகிறது.

மேலும் இப்பகுதி காட்டுப் பகுதியாகவும், இறைவி கோயில் கொண்டுள்ள இடத்தைச் சுற்றி மலர்ச்சோலைகள் சூழ்ந்து நின்றதாலும் தேவி - கா - புரம் என அழைக்கப்பட்டிருக்கலாம்.(கா-சோலை)

மலைஉச்சியில் கனககிரீஸ்வரர் கோயில் உள்ளது. மலை அடிவாரத்தில் ஸ்ரீ பெரிய நாயகி கோயில் உள்ளது. அவ்அம்மன் ஸ்ரீ பிரகன்நாயகி என்றும், ஸ்ரீ பிரகதாம்பாள் என்றும் அழைக்கப் படுகிறார்.

- சொ. சேகர், திருவண்ணாமலை.

ஒரு சமயம் சிவனின் கண்களை விளையாட் டாக பார்வதி தேவி மூடினாள். அவ்வாறு மூடியதினால் உலகமே இருண்டு விட்டது. இறைவ னுக்கு சினம் உண்டாயிற்று. இறைவியைப் பூமியில் பிறக்கும்படி சாபம் கொடுத்தார். இறைவியும் பூமியில் பிறந்து திருவண்ணாமலையில் பவழக் குன்றின் அருகில் உள்ள காட்டில் தவம் செய்ய முற்பட்டார். இறைவன் இலிங்க உருவில் தோன்றி னார். இறைவனுக்குப் பூஜை செய்ய தேவிகாபுரத்தில் பூந்தோட்டம் அமைத்தார். வழிபட்டார். தேவி பூந்தோட்டம் அமைத்து வழிபட்டதால் தேவிகா புரம் எனப் பெயர் வந்ததாக அருணாசலபுராணம் கூறுகிறது.

- ஆ. குருசாமி, அத்திமூர்.

*** தூசி :**

செய்யாரிலிருந்து காஞ்சிபுரம் சாலையில் இவ்வூர் உள்ளது. செய்யாரிலிருந்து சுமார் 23 கி.மீ. தொலைவிலும், காஞ்சிபுரத்திலிருந்து சுமார் 7 கி.மீ.

தொலைவிலும் உள்ளது. இவ்வூர் செய்யார் வட்டம் வெம்பாக்கம் ஒன்றியத்தைச் சேர்ந்தது.

பல்லவர் காலத்தில் படைகள் காஞ்சிபுரத்தி லிருந்து தெள்ளார் நோக்கி புறப்பட்டன, முன்னே செல்லும் படைப்பிரிவுக்கு தூசி என்று பெயர். அப்படைகளுள் முன்னே சென்ற பகுதி இங்கு தங்கியிருந்ததால் தூசி என்று ஊருக்குப் பெயர் ஏற்பட்டது.

- த.கோ. சம்பந்தம், செய்யார்.

* நல்லூர் :

இவ்வூர் வந்தவாசி வட்டம் தெள்ளார் ஒன்றியத்தில் உள்ளது. தெள்ளாற்றிலிருந்து வடகிழக்கில் சுமார் 7 கி.மீ. தொலைவில் நல்லூர் உள்ளது.

வயல்வளம், மக்கள் மனவளம் ஆகியவை அமைந்த ஊர் என்பதால் நல்லூர் எனப்பட்டது. இங்கு அருள்மிகு பெருமாள் ஆலயம் உள்ளது. இது மிகவும் பழைமையான ஆலயம்.

- இரா. வ. கமலக்கண்ணன், வந்தவாசி.

* நாவல் :

செய்யாரிலிருந்து தென்மேற்கில் சுமார் 10 கி.மீ. தொலைவில் இவ் வூர் உள்ளது. செய்யாற்றிலிருந்து பாராசூர், வாழ்குடைவழியாக வரும் ஆரணிப்

பேருந்தில் வந்தால் இவ்வூர் வரலாம். பாராசூருக்கும், கழனிப்பாக்கம் என்ற ஊருக்கும் இடையில் இவ்வூர் உள்ளது.

இங்கு நாவல் மரங்கள் மிகுதியாக இருந்தது. ஆகவே நாவல் எனப் பெயர் பெற்றது. இங்கு பெரும்பாலோர் ஜைன மதத்தைச் சேர்ந்தவர்கள் வாழ்கிறார்கள். இங்கு ஜைனர் கோயில் உள்ளது.

- இரா. வ. கமலக்கண்ணன், வந்தவாசி.

*** நெடுங்குணம் :**

இவ்வூர் வந்தவாசி வட்டம் பெரணமல்லூர் ஒன்றியத்தில் உள்ளது. மழையூரிலிருந்து சேத்துப்பட்டு செல்லும் வழியில் சுமார் 8 கி.மீ. தொலைவில் உள்ளது. வந்தவாசியிலிருந்து சுமார் 25 கி.மீ. தொலைவில் உள்ளது.

நெடுங்குணம் நீண்டுயர்ந்தமலை அமைந்த ஊர். இவ்வூருக்குக் கிழக்கே குன்று ஒன்று உண்டு. அதனை நெடுங்குன்றம் என்று கூறுவர். அதனடியாகப் பிறந்ததே நெடுங்குன்றம் என்ற ஊர். நெடுங்குன்றம் என்பது நெடுங்குணம் என்று ஆனது.

பெரிய மலையின் வடக்குப் பகுதியில் சிறிய மலையொன்று உண்டு. இம்மலையில் சுகப்பிரம்மம் தங்கி தவம் செய்தார் என்பர். சுகப்பிரம்மரிஷி பர்வதம் என்று வடமொழியில் கூறுவார்கள். சுகம் என்றால் கிளி என்று பொருள். அதனால் 'கிளி மலை' என்றும் இதனைக் கூறுவர்.

மழைக்காலத்தில் இம்மலையிலிருந்து ஆறு வருகிறது. அதற்கு கிளியாறு என்று பெயர். இக்கிளியாறு இரகுநாத சமுத்திரம் என்னும் சிற்றூர் வழியாக வந்தவாசி சென்று செங்கல்பட்டு மாவட்டத்திலுள்ள மதுராந்தகம் ஏரியைச் சென்றடைகிறது. இக்கிளியாறு ஓடும் பகுதியின் ஓர் இடத்தில் கிளியாநகர் என்னும் ஓர் ஊர் உள்ளது.

'மலையானே மாமேரு மன்னினானை' என்று திருநாவுக்கரசு நாயனர் பாடியருளியது போல சிவபெருமானே இம்மலையாக உருவெடுத்துள்ளார் என்பது ஐதீகம்.

இவ்வூரில் எழுந்தருளியுள்ள சிவபெருமானைத் தீர்க்காசலேசுவரர் என்று கூறுகிறார்கள். இதன் பொருள் தீர்க்க - நெடு; அசலம்-குன்றம் (மலை) ஈசன் - தலைவன். தலைவனான சிவபெருமானே இங்கு நெடுங்குன்றாக உருவெடுத்து உள்ளார் என்பது கருத்து.

பட்டினத்துப் பிள்ளையார் திருவேகம்பமுடையார் திருவந்தாதியில் திருக்கழுக்குன்றம், வெண்குன்றம் முதலிய திருத்தலங்களைப் பாடியருளியவர், தொன்மை வாய்ந்த இவ்வூரையும் பாடியுள்ளார்.

இறைத்தார் புரமெய்த வில்லிமை
நல்லிம வான்மகட்கு
மறைத்தார் கருங்குன்றம் வெண்குன்றம்
செங்குன்ற மன்னற்குன்றம்

**நிறைத்தார் நெடுங்குன்றம் நீள்கழுக்குன்றம்**
**என் தீவினைகள்**
**குறைத்தார் முதுகுன்ற மேகம்பர்**
**குன்றென்று கூறுமினே!**

என்பதே அப்பாடல்.

இம்மலையின் பாதி உயரத்தில் கந்தபாறை சுனை என ஒன்று உள்ளது. அந்த இடத்தில் மலையாக உருவெடுத்த சிவபெருமானை நினைவூட்டும் வகையில் சிவலிங்கம் ஒன்று உள்ளது.

கருவறையில் தீர்க்காஜலேசுவரர் லிங்கம் மிகவும் சிறப்பாக உள் ளது. சிவலிங்கத்தின் அடியில் உள்ளதைப் பிரம்மபாகம் என்றும் அ தற்குமேல் உள்ளதை விஷ்ணுபாகம் என்றும் மேல் உள்ள பாகத்தை உருத்திரபாகம் என்றும் கூறுவார்கள்.

- நெ. ப. சுந்தரேசன், செய்யார்.



நெடுங்குன்றத்தில் அருள்மிகு இராமச்சந்திர பெருமாள் திருக்கோயில் உள்ளது. பெருமாள் அமர்ந்த திருக்கோலம். இளவலும், பிராட்டியும் இருபுறம். எதிரே அனுமன்வேதம் வாசிப்பதுபோல் உள்ளது. (இதுபோன்ற அமைப்பு படைவீடு ஆலயத்தில் உள்ளது.)

ஆதாரம் : சோழ மண்டலத்து வரலாற்று நாயக்கர்களின் சிற்பங்களும் ஓவியங்களும் - தமிழ்ப் பல்கலைக்கழகம். ஆசிரியர் குடவாயில் பால சுப்பிரமணியம் பக்கம் 231 - 234.

**- இரா. வ. கமலக்கண்ணன், வந்தவாசி.**

* நெல்லி :

இவ்வூர் செய்யாறு வட்டம் வெம்பாக்கம் ஒன்றியத்தில் உள்ளது. செய்யாற்றின் கிழக்கில் சுமார் 12 கி.மீ. தொலைவில் நெல்லி என்ற இவ்வூர் உள்ளது. சித்தாத்தூரிலிருந்து சுமார் 2 கி.மீ. தொலைவு.

இங்கு நெல்லி மரங்கள் மிகுதியாக இருந்ததால் இப்பெயர் பெற்றது.

- இரா. வ.கமலக்கண்ணன், வந்தவாசி.



* நெற்குணம் :

இவ்வூர் வந்தவாசி வட்டம் தெள்ளார் ஒன்றியத்தில் உள்ளது. தெள்ளாற்றிலிருந்து தென்மேற்கில் நமண்டி என்ற ஊர் உள்ளது. அதையடுத்து நெற்குணம் என்ற இவ்வூர் உள்ளது.

இங்கு குன்று இருப்பதால் குன்றம் என வழங்கலாயிற்று. குன்றின் பெயர் கொண்ட ஊர்கள் தமிழகத்தில் பல உள்ளன. சான்றாக திருப்பரங் குன்றம், திருக்கழுக்குன்றம் ஆகியவற்றைச் சொல்லலாம். இவ்வூரான நெற்குன்றம் நெற்குணம் என வழங்கலாயிற்று. குன்றம் குண்ணம் என்றாகிப் பின் குணம் எனக் குறுகிற்று.

- வாழியூர் வளவன்.

*** பல்லி :**

செய்யார் வட்டம், செய்யார் ஒன்றியத்தில் இவ்வூர் உள்ளது. செய்யார் - காஞ்சிபுரம் சாலையில் செய்யாரிலிருந்து 5 கி.மீ. தொலைவில் உள்ளது.

பல்லி என்று ஒரு அரக்கன் இருந்ததாகவும் அவன் மக்களுக்குப் பல தீங்குகள் செய்ததாகவும் புராணங்கள் கூறும். அத்தகைய அரக்கனைத் திருமால் அழித்தார். அவன் பெயரால் ஏற்பட்டதே இவ்வூர்.

சமணர்களின் பள்ளி இங்கு இருந்ததாகவும், அது மருவி பல்லி என வழங்கப்படுவதாகவும் கூறுவாரும் உளர்.

- த. கோ. சம்பந்தம், செய்யார்.

*** பாஞ்சறை :**

இவ்வூர் செய்யாறு வட்டம், தெள்ளார் ஒன்றியத்தில் உள்ளது. ஆரணி, பெரணமல்லூர், மழையூர் வழியாகச் செல்லலாம். மழையூரிலிருந்து சுமார் 13 கி.மீ. வந்தவாசி தெள்ளாறு வழியாகவும் செல்லலாம்.

மூன்றாம் நந்திவர்ம பல்லவனுக்கும் சீமாறன் சீவல்லப பாண்டியனுக்கும் தெள்ளாறில் போர் நடந்தது. அப்போது இவ்விடத்தில் பாசறை அமைத்து இருந்தனர். ஆகவே பாசறை எனப் பட்டது. பாசறை மருவி பாஞ்சறை ஆயிற்று.

- இரா. வ. கமலக்கண்ணன், வந்தவாசி.

*** பாதிரி :**

இவ்வூர் வந்தவாசி வட்டம், வந்தவாசி ஒன்றியத்தைச் சேர்ந்தது.வந்தவாசியிலிருந்து வடகிழக்கில் சுமார் 1½ கி.மீ. தொலைவில் உள்ளது.

இங்கு பாதிரி மரங்கள் மிகுதியாதலால் இப்பெயர் பெற்றது என்பர்.

- இரா. வ. கமலக்கண்ணன், வந்தவாசி.

*** பாராசூர் :**

இவ்வூர் செய்யாறு வட்டம் செய்யாறு ஒன்றியத்தைச் சேர்ந்தது. செய்யாரிலிருந்து ஆரணி செல்லும் வழியில் உள்ளது. ஆரணியிலிருந்து வாழ்குடை வழியாக வரும்போது, வாழ்குடை கழனிப்பாக்கம் அடுத்தது பாராசூர். செய்யாரிலிருந்து சுமார் 10 கி.மீ. தொலைவில் உள்ளது.

இங்கு பராசமுனிவர் என்பவர் தவம் செய்ததாகவும், அதனால் பராசபுரம் எனப் பெயர் பெற்று, இப்பொழுது பாராசூர் என அழைக்கப் படுகிறது.

- பச்சையப்பன், பாராசூர்.

அரசனுடைய படைகள் இங்கு தங்கி இருந்ததாம். இரவில் காவலன் அடிக்கடி பாரா உஷார் என்று கூறிக் கொண்டு இருப்பானாம். அது மருவி பாராசூர் என்று ஆயிற்று என்பர்.

- அ. அமிர்தலிங்கம், மொடையூர்.

பாண்டவர்கள் வனவாசம் வருகையில் மண்ட கொளத்தூரில் தங்கினார்களாம். அப்போது இவ்வூர் மக்களை ஊரின் கிழக்கே உள்ள வேதகிரி மலையில் இருந்த பகாசுரன் என்பவன் மிகவும் கொடுமைப் படுத்தினான்.

பகாசூரனின் கட்டளைப்படி ஒரு நாளைக்கு ஒரு வண்டி சோறு ஏற்றி இரண்டு எருமைகளை வண்டியில் பூட்டி, அதனை வீட்டுக்கு ஒருவன் தினமும் ஓட்டிச் செல்ல வேண்டும். பகாசூரன் வண்டியைத் தவிர அனைத்தையும் உண்டு விடு வானாம்.

ஒரு நாள் பாண்டவர் தங்கியிருந்த வீட்டுச் சிறுவனுக்கு பதிலாக பீமன் வண்டியை ஓட்டிச் சென்றான். இடையில் வண்டிச் சோறையும் தானே தின்று விட்டு களிமண்ணை வண்டியில் நிரப்பி பகாசூரன் இடத்திற்கு ஓட்டிச் செல்கிறான்.

கோபமுற்ற பகாசூரன் பீமனுடன் சண்டைக்கு வருகிறான். இருவருக்கும் சண்டை நடக்கிறது. அச்சண்டை நடந்தஇடம் இப்பொழுது உள்ள பாராசூர் ஆகும். அங்கே பகாசூரனை கொல்கின்றான். அவ்வூர் பகாசூர் என வழங்கப்பட்டு பாராசூர் என அழைக்கப்படுகிறது.

- சரவேல், வாழியூர்.



*** பிரம்மதேசம் :**

இவ்வூர் செய்யாறு வட்டம், வெம்பாக்கம் ஒன்றியத்தில் உள்ளது. இவ்வூர் காஞ்சிபுரம் செல்லும் சாலையில் செய்யாரிலிருந்து சுமார் 15 கி.மீ. தொலைவில் உள்ளது.

அந்தணர்களுக்கு இறையிலி நிலமாக இது தரப்பட்டது. அவர்கள் தங்கவும், வேள்வி செய்யவும் அரசர்களால் தானமாக வழங்கப்பட்ட ஊர் இது. பிரம்மதேயம் எனப்பட்டு இப்பொழுது பிரம்ம தேசம் என அழைக்கப்படுகிறது.

- த.கோ. சம்பந்தம், செய்யாறு.

*** 5 புத்தூர் :**

இவ்வூர் வாழியூரிலிருந்து கிழக்கே சுமார் 1 கி.மீ. தொலைவில் உள்ளது. வாழியூருக்கும் சோமந்தாங்கலுக்கும் இடையில் உள்ளது. இவ்வூர் ஆரணி வட்டம், மேற்கு ஆரணி ஒன்றியத்தைச் சேர்ந்தது.

இவ்வூர் புதியதாக தோன்றியதால் புத்தூர் என்று வழங்கப்படுகிறது. ஆரணி வட்டத்தில் பல ஊர்கள் புத்தூர் என்று வழங்கப்படுவதால் இதனை அடையாளம் காட்ட 5 புத்தூர் என அழைக்கின்றனர்.

இவ்வூருக்கு கிழக்கே மிகவும் பழமையான கோயில் ஒன்று உண்டு. அது புத்தூர் அம்மன் என அழைக்கப் படுகிறது. ஒவ்வொரு பௌர்ணமிக்கும் இங்கு சிறப்பு பூஜை நடைபெற்று வருகிறது.

ஊரின் நடுநாயகமாக இராமர் கோயில் உள்ளது. இதுவும் மிகவும் பழமையான கோயிலாகும். இங்கு இராமநவமி கிருஷ்ணஜெயந்திக்கு சிறப்பு வழிபாடும் உத்சவமும் நடைபெறுகின்றன.

சிற்றூரில் பிறந்து படிப்படியாக முன்னேறி மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் வரலாற்றுத் துறைத் தலைவராகவும், பனிரெண்டு பாட நூல்களையும், பல ஆய்வுக் கட்டுரைகளை எழுதியவரும் தமிழக அரசின் 'தமிழ்நாட்டு வரலாறு' வெளியிடும் பணியில் பதிப்பாசிரியராகப் பணியாற்றியவரும், முக்கியமாக 'சம்புவராய வரலாறு' நூலின் ஆசிரியருமான திரு. கோ. தங்கவேலு என்பவர் இவ்வூரில் பிறந்தவரே!

இவ்வூர் மக்களின் முக்கிய தொழில் விவசாயம் ஆகும்.

**- சரவேல், வாழியூர்.**

*** புரிசை :**

இவ்வூர் வந்தவாசி வட்டம், அனக்காவூர் ஒன்றியத்தில் உள்ளது. செய்யாரிலிருந்து வந்தவாசி

போகும் வழியில் செய்யாரிலிருந்து 10 கி.மீ. தொலைவிலும் வந்தவாசியிலிருந்து 8 கி.மீ. தொலைவிலும் இவ்வூர் உள்ளது.

பண்டைக் காலத்தில் 'அகரம் - புரிசை' என்று அழைக்கப் பெற்றது. அகரம் - பிராமணர்கள் வாழ்கின்ற பகுதி. இது ஊரின் மேற்குப் பகுதியில் உள்ளது. கிழக்குப் பகுதியில் இருப்பது புரிசை என்று கூறுவர்.

இரண்டு ஊர்களையும் பிரிப்பது போல, வடக்குத் தெற்காக பெரிய சாலை உள்ளது. சாலையின் கிழக்கே அழகிய சிவாலயம் உள்ளது. அம்பிகையின் பெயர் அகிலாண்டேசுவரி. சுவாமி பெயர் அகத்தீஸ்வரரர் அகத்தீச முனிவர் பூசை செய்வதாகக் கூறுவர்.

அகரத்தில் கரியமாணிக்கவரதர் கோயில் உள்ளது. மேற்கில் இரேணுகாதேவி கோயில் உள்ளது. சிவலாயத்திற்கு வடக்கே துர்க்கை கோயிலும், கிழக்கே தர்மராஜாகோயிலும் தெற்கே இராமர் கோயிலும் உள்ளன.

புரிசை என்றால் மதில் - அகத்தீசர் கோயில் உட்பிரகார சுவர்களில் பெரிய புராணத்தில் இடம் பெற்றுள்ள 63 நாயன்மார்களின் வரலாற்றைப் புடைச் சிற்பமாக்கி கற்களில் செதுக்கியுள்ளனர். கந்தபுராண வரலாறும், திருவிளையாடற் புராண வரலாறும் உள்ளன. எனவே சிவாலயத்தை

அமைத்து பெருமைக்குரிய வரலாறுகளை மதிலில் இடம் பெற வைத்த காரணத்தால் புதியதாகத் தோன்றிய இவ்வூருக்கு புரிசை என்று பெயரிட்டனர் போலும்.

பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்றான முதுமொழிக் காஞ்சி என்ற நூலைப் பாடியவர் புரிசைக்கிழார் என்பவர். தொண்டை மண்டல சதக நூலாசிரியர். 'முதுமொழிக் காஞ்சி சொற்றவார் ஆர் புரிசைக் கிழவோனும் வாழ் தொண்டை மண்டலமே' என்பது அவர் வாக்கு.

**'பொன்னூர் நாட்டுப் பொன்னூர்**
**புரிசை நாட்டுப் புரிசையே'**

என்று சுந்தரர் தேவாரத்தில் வைப்புத் தலமாக இவ்வூர் இடம் பெற்ற பெருமைக்குரியது. *(7-97-6)*

இயல் தமிழில் வல்ல புரிசை முருகேச முதலியாரும், இசைத் தமிழில் வல்ல புரிசை சடகோபப்பிள்ளையும், 'நாடகத் தமிழில் வல்ல இராகவத்தம் பிரானும் வாழ்ந்த சிறப்புப் பெற்ற ஊர் இது.

ஊருக்கு மேற்கே பெரிய ஏரி உள்ளது.அது நிறைந்தால் 10 மாதங்களுக்கு நிலத்திற்கு பாயும். முப்போகம் விளையும். ஊருக்கு வடக்கில் ஒரு ஏரியும், கிழக்கில் இரண்டு ஏரிகளும் உள்ளன.

- புரிசை ச. நடராசன்.



புரிசை - மதில். பல்லவர் காலத்தில் அரசப் பிரதிநிதிகளும், வேளாண் மாந்தரும், காவல் சூழ்ந்த (மதில் சூழ்ந்த) இந்நகரில் வாழ்ந்துள்ளனர்.

- த. கோ. சம்பந்தம், செய்யார்.

*** புலிவாய் :**

இவ்வூர் வந்தவாசி வட்டம், வந்தவாசி ஒன்றியத்தில் உள்ளது. வந்தவாசியிலிருந்து காஞ்சிபுரம் செல்லும் சாலையில் உள்ளது.

புலிவாய் அருகில் வெண்குன்றம் மலை இருக்கிறது. மலையின் மேலே தவளகிரீஸ்வரர் கோயில் உள்ளது. கீழே இருந்து மலையைப் பார்த்தால் புலியின் வாய்போல பாறை தெரிகிறது. ஆகவேதான் இவ்வூர் புலிவாய் எனப் பெயர் பெற்றது என்பர்.

- **கானதாசன்,** சென்னை.

*** பெருங்கட்டூர் :**

இவ்வூர் செய்யாறுவட்டம், வெம்பாக்கம் ஒன்றியத்தில் உள்ளது. செய்யாரிலிருந்து வடக்கில் சுமார் 8 கி.மீ. தொலைவில் உள்ளது.

பல்லவர் காலத்தில் போர் வீரர்கள் கட்டூர் (பாசறை) அமைத்து தங்கி போர் செய்தனர். வீரர்கள் தங்கிய இடமாதலால் கட்டூர் எனப்பட்டது. பெரிய பாசறை பெருங்கட்டூர் என்று அழைக்கப்பட்டது.

- த.கோ. சம்பந்தம், செய்யார்.

*** பெரும்பள்ளம் :**

இவ்வூர் செய்யாறு வட்டம் செய்யாறு ஒன்றியத்தில் உள்ளது. செய்யாற்றிலிருந்து வட மேற்கில் சுமார் 8 கி.மீ. தொலைவில் இவ்வூர் உள்ளது.

ஊருக்கு அருகில் பெரிய பள்ளம் இருந்ததால் இவ்வூர் இப்பெயர் பெற்றது.

- இரா. வ. கமலக்கண்ணன், வந்தவாசி.

*** மஞ்சப்பட்டு :**

தேசூரிலிருந்து சீயமங்கலம், சீயமங்கலத்தி லிருந்து 1½ கி.மீ. தொலைவில் இவ்வூர் உள்ளது. இது வந்தவாசி வட்டம் தெள்ளாறு ஒன்றியத்தைச் சேர்ந்தது.

இவ்வூரில் மஞ்சம்புள் (இதனை மஞ்சு என்பர். மலைகளில் இருக்கும்) மிகுதியாக இருந்ததால் இப்பெயர் பெற்றது என்பர்.

- இரா. வ. கமலக்கண்ணன், வந்தவாசி.



*** மடம் :**

இவ்வூர் வந்தவாசி வட்டம், தெள்ளார் ஒன்றியத்தில் உள்ளது. தேசூரிலிருந்து 5 கி.மீ. தொலைவில் இவ்வூர் உள்ளது.

சந்நியாசிகள் இங்கு தங்கியிருந்தனர். அவர்கள் தங்கி இருந்த இடமாதலால் மடம் எனப் பெயர் பெற்றது. இங்கு தடாகபுரீஸ்வரர் கோயில் உள்ளது.

- இரா. வ. கமலக்கண்ணன், வந்தவாசி.

*** மருதாடு :**

வந்தவாசி வட்டம், வந்தவாசி ஒன்றியத்தில் இவ்வூர் உள்ளது. இவ்வூர் மருதநாடு என அழைக்கப்பட்டு, இப்பொழுது மருதாடு என அழைக்கப்படுகிறது. இவ்வூர் வந்தவாசியிலிருந்து கிழக்கே சுமார் 8 கி.மீ. தொலைவில் உள்ளது.

இது வயல்கள் நிறைந்த ஊர். மருதம் + நாடு. வயலும் வயலைச் சார்ந்த இடம் மருதம் என சங்க இலக்கியம் இதனைக் குறிப்பிடும்.

இங்கு அமைந்திருக்கும் ஆலயத்தின் பெயர் பெருந்திருக்கோயில். சில காலம் விக்கிரம சோழநல்லூர் என்ற பெயரும் இதற்கு உண்டு.

பெருந்திருக்கோயில் என்பது இக்காலத்தில் புரந்தீஸ்வரர் கோயில் எனத் திரிந்து வழங்குகிறது.

- இரா. வ. கமலக்கண்ணன், வந்தவாசி.

**மழையூர் :**

வந்தவாசியிலிருந்து சேத்துப்பட்டு போகும் வழியில் இவ்வூர் உள்ளது. இது வந்தவாசி வட்டம், தெள்ளார் ஒன்றியத்தைச் சேர்ந்தது.

இங்கு மழை அதிகமாகப் பெய்வதால் மழையூர் எனப் பெயர் பெற்றது என்பர்.

- இரா. வ. கமலக்கண்ணன், வந்தவாசி

*** மாமண்டூர் :**

இவ்வூர் செய்யாறு வட்டம், வெம்பாக்கம் ஒன்றியத்தில் உள்ளது. செய்யார் காஞ்சிபுரம் சாலையில் சுமார் 22 கி.மீ. தொலைவில் இவ்வூர் உள்ளது. காஞ்சிபுரத்திலிருந்து தெற்கில் சுமார் 8 கி.மீ. தொலைவு.

மா+மண்டூர் : மா-விலங்கு, குதிரை, யானை போன்ற விலங்குப் படைகள் தங்க வைக்கப்பட்ட ஊர் மாமண்டூர் எனப்பட்டது.

- த.கோ. சம்பந்தம், செய்யாறு.

**மும்முனி :**

இவ்வூர் வந்தவாசி வட்டம், வந்தவாசி ஒன்றியத்தைச் சேர்ந்தது. வந்தவாசிக்கு மேற்கில் 1 கி.மீ. தூரத்தில் இவ்வூர் உள்ளது.

தவளம், ஜெயதவளம் என்னும் நூல்களுக்கு உரை எழுதிய பூதபுலி, புஷ்பதஞ் என்ற இரு முனிவர் களும் அவர்தம் ஆசிரியர் வீரதேசாச்சாரியார் என்னும் முனிவரும் இங்கு வாழ்ந்தனர். மும்முனி களும் வாழ்ந்தபோது வனமாக இருந்த இப்பகுதி

இப்போது ஊராக மாறியுள்ளது. அவர்கள் பெயரால் மும்முனி என்று பெயர் பெற்றது என்பர்.

- பூ. பரசுராமன், சேத்துப்பட்டு.



*** மூதூர் :**

இவ்வூர் வந்தவாசி வட்டம், வந்தவாசி ஒன்றியத்தில் உள்ளது. ஏகம்பலத்திலிருந்து சுமார் 6 கி.மீ. தொலைவில் உள்ளது.

முதுமை + ஊர் = மூதூர். மிகவும் பழமையான ஊர் என்பதால் இவ்வூர் மூதூர் என அழைக்கப் படுகிறது.

- **இரா. வ.கமலக்கண்ணன்,** வந்தவாசி.

*** வண்ணாங்குளம் :**

இவ்வூர் வேலூர் போளூர் சாலையில் வேலூரிலிருந்து சுமார் 25 கி.மீ. தொலைவிலும் ஆரணியிலிருந்து சுமார் 13 கி.மீ. தொலைவிலும் உள்ளது. ஆரணியிலிருந்து இவ்வூர் வழியாக பேருந்து வசதி உண்டு.

வண்ணகுளம் என்பது வண்ணாங்குளம் என்று ஆயிற்று என்பர். வண்ண என்றால் அழகிய

என பொருள். இவ்வூருக்கு தெற்கே ஒரு பெரிய அழகிய குளம் இருக்கிறது. இப்பொழுது இருக்கும் வண்ணாங்குளம் அங்கு இருந்ததாகவும் இயற்கையின் சீற்றத்தால் அங்கிருந்த ஊர் இங்கு வந்து விட்டதாகவும் கூறுவர்.

அங்கிருந்த குஞ்சன் என்ற ஒருவர் குடி பெயர்ந்து வாழியூர் சாலைக்கு அருகிலுள்ள ஒரு இடத்தற்கு சென்று விட்டதாகவும் அங்கு ஓர் ஊர் ஏற்பட்டு அது அவர் பெயரால் குஞ்சாந்தாங்கல் என பெயர் வந்ததாகவும் கூறுவர்.

வண்ணாங்குளத்தில் ஒரு ஈஸ்வரன் கோயில் உள்ளது. அது பழைய கோயில். இங்கு உடையார் மேடு என்ற ஓரிடத்தில் சிவலிங்கம் புதையுண்டு இருந்ததாகவும், சேஷாத்திரி சுவாமிகள் திருவண்ணாமலை செல்லும்போது இவ்வூர் வழியாக வந்ததாகக் கூறுவர். அப்பொழுது இங்கிருந்த சிவலிங்கத்தை எடுத்துச் சென்று ஈஸ்வரன் கோயிலில் பிரதிஷ்டை செய்ததாகக் கூறுவர்.

**- க. விநாயகம், வண்ணாங்குளம்.**

*** வந்தவாசி :**

வந்தவாசியிலிருந்து செய்யாருக்கு அடிக்கடி பேருந்து உண்டு.

ஆரணிக்கும், மற்றும் பல ஊர்களுக்கும் பேருந்து உண்டு. திருவண்ணாமலை மாவட்டத்தில் இதுவும் ஒரு பெரிய நகரம்.

வந்தவாசியில் சுகநதி என்ற சிற்றாறு ஓடுகிறது. நோயினால் பாதிக்கப்பட்ட மன்னன் ஒருவனுக்கு எவ்வளவோ மருத்துவம் செய்தும் குணம் அடையவில்லை. இந்நிலையில் இவ்வூர் வந்தான், சுகநதியில் குளித்தான், குணமானான்.

அவ்வாசி இங்கு வந்து குணமானதால் இவ்வூர் வந்தவாசி ஆயிற்று.

- **கானதாசன்,** சென்னை.

வெளியூர் வணிகன் ஒருவன் நீண்ட நாட்கள் நோயினால் துன்புற்று இவ்வூருக்கு வந்தான். பல இடங்களுக்குச்சென்றும் தீராத அவர்தம் நோய், இவ்வூரில் தங்கி மருத்துவம் செய்துக் கொண்ட போது நோய் நீங்கி நலம் பெற்றார். இவ்வூருக்கு வந்து வாசியானதால். அதாவது குணம் பெற்றமை யால் 'வந்த வாசி' என்று அழைக்கப்பட்டு வந்தவாசி என்று பெயர் வந்தது என்பர்.

- **பூ. பரசுராமன்,** சேத்துப்பட்டு.

வந்துவாசி - வந்தவாசி. பூமாலை செட்டி என்பவர் தீராத வயிற்றுவலியால் துன்புற்று, இங்கு

வந்து ஜலகண்டேசுவரரை வணங்கி வாசி (நலம்) பெற்றதால் இப்பெயர் ஏற்பட்டது. அவர் வெட்டிய குளம் ஒன்று பூமா(லை) செட்டிக் குளம் என்று உள்ளது.

**- இரா. வ. கமலக்கண்ணன்,** வந்தவாசி.

*** வெட்டியாந்தொழுவம் :**

இவ்வூர் ஆரணி வட்டம் ஆரணி ஒன்றியத்தில் உள்ளது. ஆரணிக்கு மேற்கே சுமார் 6 கி.மீ. தொலைவில் உள்ளது. ஆரணியிலிருந்து சேவூர் வழியாக இவ்வூரை அடையலாம். எப்பொழுதோ ஒரு முறை இவ்வூருக்கு பேருந்து போகும் வரும். வெட்டியான் - கிராமச் சேவகன்; தொழுவம் - மாட்டுக்கொட்டில் - மாடுகள் கட்டுமிடம்.

ஆரணிக்கு அருகில் அக்ராபாளையம் என்று ஒரு ஊர் உள்ளது. அங்கு வெட்டியான் ஒருவன் வாழ்ந்து வந்தான். அவன் மாடுகளை வளர்த்து வந்தான். தினமும் அவன் மாடுகளைக் கட்டி வைத்த இடத்திலிருந்து அவிழ்த்து விடுவான். அம்மாடுகள் தினமும் காலையில் வெளியே புல்வெளிக்குச் சென்று மேய்ந்து விட்டு மாலையில் திரும்பி தொழுவம் வந்து சேரும். ஒருநாள் வெளியே சென்ற மாடுகளில் ஒன்று திரும்பி வரவில்லை. என்ன ஆயிற்றோ என வருத்தமுடன் அம்மாட்டைத் தேடிச்சென்றான்.

வெளியே சென்ற மாடுகள் மேய்ந்து விட்டு ஏரியில் தண்ணீர் குடித்து விட்டு கரையேறி வந்திருக்கின்றன. அவற்றில் ஒரு மாடு மட்டும் அருகில் உள்ள பள்ளத்தில் விழுந்து விட்டது. அம்மா! அம்மா! என அலறித் துடித்தது. யாரும் உதவிக்கு வரவில்லை. பள்ளத்திலிருந்து வெளியே வரவில்லை. ஏன்? அதன் இரு பின்னங்கால்களும் ஒடிந்து விட்டன.

தேடிச் சென்ற வெட்டியான் அம்மாடு இருந்த கோலத்தைக் கண்டான். எப்படியோ வெளியே கொணர்ந்தான். அம்மாட்டினால் ஒரு அடி கூட நடக்க முடியவில்லை.

அவன் அங்கே அம்மாட்டுக்கு ஒரு தொழுவம் கட்டினான். அவனும் அங்கேயே தங்கி விட்டான். பின்னர் அங்கு ஒவ்வொன்றாக வீடுகள் தோன்றி ஒரு ஊரே தோன்றியது. அவ்விடமே 'வெட்டியாந் தொழுவம்' என்பர்.

- வாழியூர் வே. இராசவேலன்.

*** வெண்குன்றம் :**

இவ்வூர் வந்தவாசி வட்டம், வந்தவாசி ஒன்றியத்தில் உள்ளது. இவ்வூர் வந்தவாசியிலிருந்து வடக்கில் சுமார் 3 கி.மீ. தொலைவில் உள்ளது.

இவ்வூரில் வெண்மையான குன்று ஒன்று உள்ளது. ஆகவே வெண்குன்றம் எனப் பெயர் பெற்றது. இங்கு ஜைனர் ஆலயமும், சிவாலயமும் உள்ளன.

- இரா. வ. கமலக்கண்ணன், வந்தவாசி.

*** வெம்பாக்கம் :**

இவ்வூர் செய்யார் காஞ்சிபுரம் சாலையில் செய்யாறிலிருந்து 20 கி.மீ. தொலைவில் உள்ளது. திருவள்ளூர் ரயில் நிலையத்திலிருந்து 11 கி.மீ. தூரம்.

வேள் - பாக்கம் ; வேள் - விரும்பி; பாக்கம் - ஆற்றங்கரையில் உள்ள ஊர். அரசப் பிரதிநிதிகள் விரும்பி ஆற்றங்கரையில் (பாலாறு) குடியேறிய காரணத்தால் வேள்பாக்கம் என வழங்கி அது மருவி வெண்பாக்கம் என அழைக்கப்படுகிறது.

- த.கோ. சம்பந்தம், செய்யார்.





மேலக்காண்டை மகாகவி பாரதி நற்பணி மன்றத்தின் சார்பாக
வாழியூர் வே. இராசவேலன் அவர்களுக்கு
கவிமாமணி ஏர்வாடி எஸ்.இராதாகிருஷ்ணன்
அவர்கள் 'செந்தமிழ்ச் சிகரம்' விருது வழங்குகிறார்